ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம.

# திருவேங்கடவுலா



இது

துறையூர்-உபாத்தியாயர்

ஸ்ரீமான்-மு-கோவிந்தப்பிள்ளையவர்கள்

வேண்டுகோளின்படி

கோயமுத்தூரைச்சார்ந்த பூளைமேடு

வித்வான்

ஸ்ரீமான்-முத்துநாயுடு அவர்கள் குமாரர்

வேணுகோபாலசாமி நாயுடு

அவர்களால் பரிசோதிக்கப்பட்டு,

சென்னை-சூளை,

லக்ஷ்மிநாராயண விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1903.

ஸ்ரீ

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| திருவேங்கடவுலா | 0 | 3 | 0 |
| ஸ்ரீ ஆண்டாள் பிள்ளைத்தமிழ் | 0 | 3 | 0 |
| ஸ்ரீ ஆண்டாள் சந்திரகலாமாலை | 0 | 1 | 0 |
| அழகர் கிள்ளைவிடுதூது | 0 | 1 | 0 |
| அரங்கநாத கவிராயர் பாரதம் | 1 | 8 | 0 |
| இராமஜயத் திருப்புகழ் | 0 | 6 | 0 |
| திருநாகைப்புராணம் (வைஷ்ணவம்) | 0 | 10 | 0 |
| உசித சூடாமணி நிகண்டு | 0 | 6 | 0 |

இப்புத்தகங்கள் வேண்டுவோர் சென்னை சூளை சாமிபிள்ளை தெரு 19-வது இலக்க கிருகத்தில் ஸ்ரீமான்-சே-முத்துகிருஷ்ண நாயுடு அவர்களிடத்திலும், முசிரி தாலூகா, துறையூர், உபாத்திய ர் ஸ்ரீமான்-மு-கோவிந்தப்பிள்ளை அவர்களிடத்திலும், கோயமுத்தூர் புஸ்தகஷாப் ம-ா-ா-ஸ்ரீ பெ-கோவிந்த கவுடரிடத்திலு பெற்றுக்கொள்ளலாம்.

பணையணங் காழியும் பால்வெண் சங்கமுந்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ராரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்ற வண்ணமும்'' என்றும் சிலப்
ாத்தில் மதுரைச் சங்கப் புலவர் காலத்திருந்த இளங்கோ
கரும்,

ஸ்ரீபரசு ராமாழ்வான் றிருத் தம்பியாராகிய தொல் காப்பிய
ேவர் செய்தருளிய தொல்காப்பியப் பாயிரத்து ''வடவேங்கடந்
ம்மரி'' என்னுஞ் சூத்திரவுரையுள்,

லங்கடந்த நெடுமுடி யண்ணலை நோக்கி யுலகந் தவஞ்செய்
பெற்ற மலையாதலானும், எல்லாரு மறியப் படுதலானும்
த்தை மெல்லை யாகக் கூறினர்.'' என்று, செந்தமிழ்
ளிற் சிறந்த பஞ்சகாவியங்களி லொன்றாகிய சிந்தாமணி
புறச்சமய நூல்களைத் தம்மத நூலேபோ லபிமானித்தும்,
மை மேம்பொருளை யன்னதன் கொள்கைக் கிணங்கு
ரைசெய்த ''நவின்ற வாய்மை'' நச்சினார்க்கினியாரும்,

– றற்குந் தென்சொற்கும் வரம்பாகு நான்மறையு மற்றைநூலு
சாற்ற பொருட்கெல்லா மெல்லையதாய்நல்லறத்துக்கீறாய்வேறு
ற்றார் துணையினறிப் புகழ்பொதிந்த மெய்யேபோற்பூத்துநின்ற
ற்றுக் தண்சார லோங்கியவேங்கடத்திற்சென்றுறுதிமாதோ''

ன்று கவிச்சக்கர வர்த்தியாங் கம்பநாட்டடிகளும்,

த்திக்கொரு வித்தாகிய திருவேங்கட மென்னுந்
திச்சொரி யருவித்தட வரவக்கிரி சார்ந்தான்

ன்று ஸ்ரீமகா பாரதத்துள் ஸ்ரீமத் வில்லிபுத்தூராழ்வாரும்,

ஸ்ரீ

ஸ்ரீமந்நிகமாந்தகுரவே நம:

# முகவுரை.



ஸ்ரீவைகுந்தமாகிய "நலமந்த மில்லதோர் நாட்டி லந்தமில்
...தத்தடிய''ருடன் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீயங்காராயனன்,
...ளுய்யும் பொருட்டு அர்ச்சாவதாரமாய் இந்நில வுலகின்
...காயிலகொண் டெழுந்தருளி யுள்ள திவ்விய தேசங்களுள்
பெற்ற கோயில்-திருமலை-பெருமாள் கோயில் என்னு
ளொன்றாய், வராகாத்திரி-சேஷாத்திரி-சிங்காத்திரி-ரிஷ
ஆஞ்சநாசலம் - கருடாசலம்-வேங்கடாசலம் - கனகாசலம்-
-சிந்தாமணிகிரி- ஸ்ரீநிவாசாசலம்-தீர்த்தாத்திரி-தருமாத்திரி-
முதலிய பல திரு நாமங்களுடன் விளங்குவதாய், ஸ்ரீமத்
ம-ஸ்ரீமகாபாரதம்-வராகம்-வாமனம்-காருடம்-பதுமம் - பிர
ண்டம் - ஸ்காந்தம - மார்க்கண்டேயம்-பவிஷ்யோத்தரம்
இதிகாச புராணங்களால் புகழப் படுவதாய், "மயர்வற
மருளப் பெற்ற ஆழ்வார்க ளொன்பதின்மர்களாலும் மங்களா
செய்யப்பட்டதாய்த் திகழும், "இலகமுலகுக்கென நின்ற
ட'' மென்னப்பட்ட திருமலையை,

நடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்'' என்றும்,

" வீங்குநீ ரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
யிருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
மின்னுக் கோடியுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்

“ வந்திக்க வந்தனை கொள்ளென்று கந்தனு மாதவருஞ்
சிந்திக்க வந்தனை வேங்கட நாத.”

என்று அஷ்டப் பிரபந்தத்துள் ஸ்ரீமத் திவ்வியகவிப் பிள்ளைப் பெருமாளையங்காரும்,

“இரவி மண்டலத்தும் பயோததி யிடத்து மிந்திரங் குபேந்திரனுயு
மருவுமென் செயலா லேதிரிதாமாவென் றெனக்குப்பெயர் வகுத்தேன்
தரையினி னரங்கம் வேங்கட மூட்டஞ் சாலக்கிராமம் புட்கரம்வான்
சுரர்துதி வதரி நைமிசவனஞ் சிங்காத்திரி யிவையெட்டுஞ் சுவயம்.”

என்று ஸ்ரீமகாபாகவதபுராணத்துள் திருமால் சுயம்புத்தலங்க ளெட்டனு ளொன்றென்று மதுரகவி வரதராஜ ஐயங்காரும்,

திருமாலின் தசாவதாரங்களையு மடக்கியப்பாடிய வெண்பாவில் “மெச்சுபுகழ் வேங்கடவா” என்று காளமேகப் புலவரும்,

“கடன்மல்லை திருவல்லிக் கேணிபுட்குழிநகரங்கடிகையெங்கோன்
இடவெந்தை வேங்கடமாமலைதொண்டைநாட்டிவையோரெண்மூன்ற [ப்பால்”
என்று பிரபோதசந்திரோதயத்துள் திருவேங்கடசுவாமியும்,

“ விரிதலைநிலங்கடந்தோன் வேங்கடத்தருகடைந்து
பரசுராமேசுரத்தின் பாலடைந்தெழிற்காளத்தித்
திருமகட்காரமென்னச் சிறந்துதீத்திசைதிரும்பி
பொருவிலோங்காரமூதூர்ப் புகுந்துபோய்க்கடல்புக்கன்றே.”

“ அரவணைச்செல்வன்வாழு மந்தமிழ்நிலத்திடினல்லை
திருமலைகண்டுகொண்டோர் செறிவினைத்தொடரறுக்கும்
பெருவரைகண்டிறைஞ்சிப் பிறங்குவெள்ளருவிதாழும்
பொருவருமேமகூடப் பொருப்பினையினிதுகண்டான்.”

என்று சீகாளத்திப்புராணத்துள் வீரசைவமதத்தினராகிய சிவப்பிரகாசரும்,

"விருப்படியார் சொரிந்தநறுமலருடனே விழிவிடந்த வேடர்காலிற்
செருப்படியுமுகந்தபிரான் காளத்திநகரமெனுந்தெய்வப்பூமி
'பருப்பதமாகியும் விளங்குந் தண்ணன்றுக்கொழிக்குமலர்ப்பதுமையோடு
மருப்படியுந் துழாய்மார்பன்வடமலைமேலிருந்துகண்வளங்குமாறே.

என்று அருணசல புராணத்துள் சைவ எல்லப்ப நாவலரும புகழ்ந்து துதித்துப் பாடிய திருவேங்கட முடையான் விஷய... சொன்னயம் பொருணயம் பொலியுமாறு திருவேங்கட ... என்னும் இந்நூலை யருளிச்செய்த நூலாசிரியர் சரித்திர முதலியன ஒன்றுந் தெரிந்தில. தெரிந்தார் அறிவிப்பாராயின் அவர் பெயருடன் மறுபதிப்பிற் பதிப்பிக்கப்படும்.

உலா என்பது, இளம் பருவமுற்ற தலைமகனைக் குலங் குடிப் பிறப்பு மங்கலம பாரம்பரையிவற்றா னின்னுனென்பது தோன்றத் தலைமையாய மங்கையர் நெருங்கிய தெருவில் அத்தலைவன் பவனி வரப் பேதைமுதலிய எழு பருவப் பெண்களுங் கண்டு தொழுவதாக கேளிசைக்கலிவெண்பாவாற் பாடுவது.

இங்ஙனம்,

☞ தே. சடகோப பிள்ளை.

வளவனூர்

ஸ்ரீ

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩ | ௨ | யாராயத் | யாராய |
| ௪ | ௩ | தெழுந்தவத்தோர் | தெழுதவத்தோர் |
| ௧0 | ௧௬ | படிபஞ்சு | படிபஞ்ச |
| ௧௧ | ௧௪ | புழுக்கலுஞ் | புழுககிலுஞ் |
| ௧௨ | ௩ | செயய | செயத |
| ,, | ௧௬ | பொற்ருரி | பெறருரி |
| ௧௭ | ௧௬ | காள | காளே |
| ௧௮ | ௨௧ | யச்சுதணா | யச்சுதணே |
| ௨௩ | ௨௨ | லூற்றளக | லூற்றிலிள |
| ௨௭ | ௬ | குலேநததோ | குலேந்தவோ |
| ௨௮ | ௫ | முக்கூனி முதுகூனி கூனேக் | மக்கூனி முதுகூனக் கூனேக் |
| ௨௯ | ௨ | குழிந்து | குழைந்து |
| ,, | ௮ | தன்புடை | தன்படை |
| ,, | ௧௨ | வறக | வர்க்க |
| ௩௫ | ௮ | டுறத்தா | டுறந்தா |
| ௩௬ | ௭ | யிலக்குமணே | யிலக்கணே |
| ௩௯ | ௮ | மததன் | மத்திக் |
| ,, | ௨0 | வெற்றி | வற்றிப் |
| ௪௨ | ௧ | மதுரவிரற | மதுரரச |
| ,, | ௨0 | முழுகிய நீ | முழுகினு |
| ௪௭ | ௧ | நேரெறறு | நேரேற்று |
| ,, | ௧௩ | கம்மிற் | கம்பிற் |
| ௫௧ | ௧௮ | வனேந்த | வளேத்த |
| ௫௨ | ௧௯ | சேயதே | செயதே |
| ௫௬ | ௩ | சிவமே | செபமே |
| ,, | ௪ | தவமே | தபமே |

ஸ்ரீ

  

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஸ்ரீமந்நிகமாந்தகுரவேநம:.

# திருவேங்கடவுலா.

## காப்பு.

### நேரிசைவெண்பா.

மருவுலா வுந்தார் வடமலையான் மீதே
திருவுலா வொன்றடியேன் செப்பக்—குருகையர்கோன்
காப்பரவன் காப்புவணன் காப்பனுமன் காப்புமயன்
காப்புனிதன் காப்பனுசன் காப்பு.

### அவையடக்கம்.

கோடியுலா வேங்கடத்திற் கொண்டலெனக்கொண்டாற்குத்
தேடியுலா வொன்றடியேன் செப்புதலே—நாடி
யொளியூட்டு மண்டமெலா முண்டவயி றுண்ணப்
பொளியூட்டுக் காட்டுவார் போன்ம்.

ஸ்ரீ

# நூல்.

## தலவிசேடம்.

பூமாலை பொன்மாலை பொற்பொன் பதுமமணியின்
மாமாலை பச்சை வனமாலை—பாமாலை
சூடுமபி ராமன் சுருதியிலே நின்றுவிளை
யாடுமபி ராம னகிலேச—னீடுபசிக்
குண்பவள வாய வுலகைக் கவளமிட்ட
வண்பவள வாயன் வளவாய—னெண்பதின்ம
ரண்டமாலைத் திரளை யண்டத் தொடுத்தணிந்த
கண்டமாலைத் திரளைக் கண்டமால்—குண்டிகையிற்
சந்தியா னித்துச் சலநிதியா னித்துலகை
யுந்தியா னைப்படைக்கு முந்தியா—னந்தியான்
கோல வுமையுடனே கூடி யமுதருந்தப்
பால னணுகாப் படிகண்டு—வேலவா
தாருகனைக் கொன்றவினைத் தாகம்போந் தாரகத்தை
நாரணநா மத்தைநினை நாமத்தை—யோருருவே
சொன்னா லனந்தகற்பந் தூய்நீ ரளைந்ததொக்கு
மென்னா வவனவனைக் கேயென்ன—முன்னாளில்
வாசுகியை வீசையிலே வாதரா சன்சருவ
வீசு மகமேரு வின்பிள்ளை—காசிநகர்
கங்கைக் கொருதெற்கே காவதமுந் நூற்றிலே
சிங்க மலையாய்த் திருமலையா—யங்கரங்க

நாராயணமலையாய் நாகமலையாய்ஞான
வாராக பூமி மகாமலையா—யாராயத்
தருமமலையாய்ஞ் சனமலையாய்ச் செம்பொற்
கருடமலையாய்வேங் கடமலையா—யருளிடப
மாமலையாய் நின்ற வடமலைக்கே யானுரைத்த
நாம நிதியை நவின்றேத்திச்—சேமமெனச்
சங்கனுப னீசானன் சத்திகா பாலிசுகன்
சுங்கன் பிருகு துருவாச—னங்கிரா
மார்க்கண்டன் மாண்டவியன் வாமதேவன் புலகன்
கார்க்கியன் சூதன் கலைக்கோட்ட—னூற்குசிகன் ௧௫
கோசிகன் வான்மீகன் குப்போதயன்கணுவன்
காசிபன் றக்கன் கவுதமன்—பாசதர
னந்தன் பரத்துவச னாரதன் புண்டரிகன்
சந்தன் மரீசி சவுனக—னந்தச்
சனக சனந்த சனற்குமா ரப்பே
ரனக ரனேக ரனேகர்—தினமவர்கள்
வாயுப் பொசித்திருக்க மற்றோ ரடைபொசித்துத்
தூயதவஞ் செய்யத் தொடங்கினார்—நீயும்போ
வென்னப் பிதாவை யிறைஞ்சி யிளவேலோன்
வன்னக் கலாப மயிலேறித்—தென்னிலத்துப் ௨0
பக்கமதிற் பொன்முகரி பாய்வேங் கடநண்ணிச்
சக்கர தீர்த்தந் தனிலாடி—மிக்கநெடு

மாற்காலே நாற்கால் வணங்கிமணி வச்சிரத்தி
னீர்க்கா லருஞ்சுனையை நின்றேத்தி—வேற்கையாற்

சேனை பதித்தடத்தைச் சேவித் தெழுந்தவத்தோர்
தானுடு தீர்த்தந் தலைக்கொண்டு—வானுடு

பஞ்சா யுததீர்த்தம் பாவிமுத னற்றீர்த்தஞ்
செஞ்சார் பிரமதடஞ் சென்றேத்திக்—கஞ்சமடுப்

பாண்டவதீர்த் தங்குடைந்து பாவநா சத்தலைந்து
தூண்டு மெனுப்புச் சுனைமூழ்கி—நீண்டிழியு

மாகாய தீர்த்த மளைந்து கொடிவழியின்
பாகாய தீர்த்தம் பரிசித்து—வாகாய

நாவலூற் றிற்பொருந்தி நல்விண் ணவதீர்த்த
மாவலாற் றுவி யளாவியே—பூவிருந்த

வாயவிய மச்ச வராகதீர்த் தங்களெனுந்
தோயமெலாங் காயமெலாந் தோய்ந்தேறி—யாயத்

தமரர்பாய் கோனேரி யாடிமறை பாடிக்
குமரதா ரைக்கே குறுகித்—தமரகத்தோன்

செப்புமெழுத் தெட்டுந் தியானித்து நின்றளவி
லிப்புனித னப்புனித ரெல்லோர்க்கு—மப்பொழுது

குண்டலங்க ளாயிரங்கள் கோடீர மாயிரங்க
ளண்டரண்ட மெய்யிலே யாயிரங்கண்—மண்டலங்கள்

வைத்தமுக மாயிரங்கள் வண்பாணித் திண்புயங்க
ளொத்தனே றாயிரங்க ளென்னவே—மொய்த்திலங்கு

விண்பூத்த மேகமென மேவிடனு மாதவருந்
தண்பூத் தவிசோனுஞ் சண்முகனுங்—கண்பூத்துப்

பார்க்கவச மல்ல பரனே தனிமுகமும்
நாற்கரமு மாயெமக்கு நல்கென்னக்—கார்கமலக்

கோனேரித் தென்கரையை குந்தவிமா னத்தெளிதாய்த்
தானே யவதரித்த தம்பிரான்—றேனூர் ௩௫

திருவேங் கடத்தரசு செண்பகவா சற்கோ
னொருவேங் கடத்தி னுறைவோ—னருளுடைய

நித்தன் மலைகுனிய நின்று னிழல்விலங்காப்
புத்தலரத் தாணிப் புளியினான்—சித்தருள

வாச னெழிற்சீனி வாச னமக்கெதிரே
பேசி வரமளிக்கும் பேராளன்—கேசவன்

செங்கனி வாயன் றிருவேங் கடமுடையான்
மங்கையலர் மேன்மங்கை மார்பினான்—கங்குல்பகல்

வெற்றிப் புழுகொழுகு மேனியான் காணிக்கை
நிற்றற்பத் தாய நிரப்புவோன்—பொற்றிகிரி ௪0

தொண்டைமா னுக்களித்தோன் றொண்டரெலாம் வந்துப
கண்டுபோ மென்றுகரங் காட்டுவோன்—கொண்டல் (தங்

வெறுங்கைவே டன்பெரிய வேங்கடத்து வாணன்
சிறந்தபல வானவர்பூ சித்தா—னிறைந்தகவி

நீழ்வாரத் தேதொழுது நின்று கனிந்துருகி
யாழ்வார்கள் பாடு மணிமலையான்—வாழ்வான்

திருப்பதியிற் பாம்பணையான் சித்திரகூ டத்தா
னருட்புனைந்த வேங்கடக்கோட் டத்தான்—பொருப்பனைய

வஞ்சனைவெற் பாள னழகப் பிரானெய்திக்
கஞ்சையிலே பெண்கொண்ட கட்டழகன்—பஞ்சவர்க்கு ()

ளச்சுவதி தேரை யருச்சுனனுக் கோட்டினன்
பச்சுருவன் கோவை பரணியா—னிச்சுதரைக்

கார்த்திகையென் றேகுந்தி கட்டுரைப்பான் வேதாவின்
வாய்த்த வுரோகணியின் வர்க்கத்தான்—கோத்தசிலை

வேழக்கா னோடி மிருகசிரத் தேயெய்தா
னூழக் கனதரங்க வாதிரையான்—வாழியமட்

பூதிபுனர் பூசத்தான் பூசத்தா னுண்மகிழ்வா
னீனரெலா மாயி லியம்பரியான்—வானவர்கள்

பூரிமகத் தானணிகற் பூரத்தா னுத்தரத்தான்
சீரியவத் தன்மணிரா சித்திரையான்—வேரிமழை ௫0

யன்னவெழிற் சோதியா னவிசா காப்பதத்தான்
மன்னனுடன் வந்தான் மணவாள—னுன்னி

யலையத்தி கேட்டை யடுமூல மானன்
பலபொற்பூ ராடம் பரத்தா—னிலவாய்

நகைக்குமுத்த ராடவெழி னற்குரவை யானன்
மிகைத்ததிரு வோணத்தின் மீதா—னிகைத்தா

யிதையவிட்ட மானு னெனதுபகை வெற்பைச்
சதையவிட்ட பூங்கமலத் தாளான்—குதையம்பா

லப்பூரட் டாதி யமரர்க்கா யுத்திரட்டா
திப்பூத னெந்தை யிரேவதிக்கோ—னெப்போது ௫௫

மேட விநோதாளான் வித்துநாற் றுவர்தந்தை
மேடமே யென்ன விரித்தான்—மேடமே

யிடபமென வீட்டினா னிடபமே நீச
னிடபணிமு னோனிடபற் கிறைவ—னிடப

நகமிதுன தேசமே நண்ணினோ னாத
மிகுமிதுனத் தோன்றுய்ய மேகஞ்—சகமிகுத்த

கற்கடகம் வந்தொன்றக் கற்கடகம் யோந்தொன்றக்
கற்கடகஞ் சேர்ந்த கரத்தினான்—கற்கடகன்

சிங்கக் கொடியோனைச் சின்னபின் னஞ்செய்தோன்
சிங்கமலை மேவு நரசிங்கம்—சிங்கத்தி ௬௰

லேறுகன்னிக் கேதிகிரி யீந்தோ னிலக்குவனைக்
கூறுகன்னி யாகுமரி கொள்கின்றோன்—வீறுகன்னி

மாடத் துலாவுகின்ற மாதுபொருட் டால்வாளி
சூடத் துலாக்கடலைத் தூர்த்தோன்—றுடைசையாம்

விருச்சிகத்துக் கொப்பான வீணிதலை பேய்போல்
விருச்சிகத்தை வேவ விடுத்தோன்—விருச்சிகத்துத்

தனுசுபடா நெஞ்சுபோற் றண்ணனந் துழாயான்
றனுசுபடா வின்பிற் றரிப்போன்—தனுசுவத்தின்

மகர குண்டலத்தான் மாமகர வாரிதியின்
மகரைவென் றோனைவென்ற மாயன்—மகுடங்கள் ௬௫

கும்பங் குடங்கரிணைக் கொங்கையரைக் கூத்தாட்டுங்
கும்பனிகும் பன்விழுக் கோவித்தோன்—கும்ப

காரணன் றலையைக் கடன்மீனக் கவ்விக்
காரணமிடத் தூண்டுங் கணையான்—கருணையா

லாதித்த னைச்சிலைய யங்கா ரகன்றன்னைப்
போதித்த நம்புதனைப் பொன்னவனை—வாதித்தி
வெள்ளி தனைச்சனியை வெட்டுண்ட துட்டர் தமைத்
தள்ளி விடவேசலிகை தந்தோ—னெள்ளிய
சித்திரைதா னென்றேன் றேவாதி தேவன்
சித்திரைதா னென்றோரைச் சேறுவோன்—சித்திரையாய் ()

வையாசி கூறு மறையோர்கள் சிந்தனையே
வையாசி யீந்த வரதன்—வையகரன்
ஆனிய மத்திடவே யாருக் கசடர்களுக்
கானிய மத்தை யறிவிப்போ—னானிலமே
லாடி வராதிருந்தா லாகா தெனத்தள்
ளாடிவர வேயரவி லாடினோ—னாடிபா
லாவணியைக் கூடாம லாகவரை யேத்தினோ
னாவணியி லோசைதனி ரோகையா—னாவணியில்
வந்தபுரட் டாதியெல்லா மாற்றுவோன் வீடணனை
வந்தபுரட் டாதிலங்கை வைகென்றான்—வந்துபுர ௭௬
மற்பசித்த பேர்களை யவரவரொன் றன்னமிட்டா
னற்பசிக்குந் தீங்குக் கணுகாதோ—னற்பசிக்குஞ்

சிந்தியா னோர்த் திகையார்க்குச் செல்வமே
பந்தியா கார்த்திகைக்க பாஸியான்—சிந்தையாய்

மார்கழியா வாச மணிமா வுளான்மங்கை
மார்கழியா தெய்யு மகன்றுதை—மார்கழியா

மாத்தையி லேமலைவான் வானெறியே நேயனுக்கு
மாத்தையிலே சொர்க்கம் வழங்குவோன்—மாத்தையிலே

மாசியா வேதா வழியே மகம்புரிசோ
மாசியாம் வேதன் வணங்குவோன்—மாசிமாப் அ0

பங்குனிக்குப் பிஞ்சு பலிக்குங் குருநாடு
பங்குனிக்கச் சொன்ன பரந்தாமன்—பங்குனித்

தேரிருக்கச் சொல்லிச் செலுத்தினோன் றேவருக்குப்
பாரிருக்கச் சொல்லிப் படிவித்தோன்—ருரிருக்குஞ்

செப்போ டிருக்குந் திருவிருக்கு மார்பினோ
னெப்போது மென்னெஞ் சினிலிருப்போ—னப்பேழுங்

காயத்தா னெய்தகருங் காயத்தான் மேலையா
காயத்தா னுயேன்ச காயத்தா—னுயிரநா

மத்தினு னந்தணரோ மத்தினு னுன்மறைச்சே
மத்தினன் பாலாழி மத்தினுன்—மொய்த்தமறை அ௫

யங்கத்தான் பொற்பாண்ட ரங்கத்தா னெல்லாந்த
னங்கத்தான் செங்கைச்சா ரங்கத்தான்—சங்கத்தான்

றன்கைத் திகிரியான் றண்ணந் திகிரியான்
றென்கச் சியிலத் திகிரியா—அன்னைக்கு

ளோட்டினா னுண்பலியை யோட்டினான் வைகுந்த
நாட்டினா னென்புலமை நாட்டினான் — கூட்டுமறை
நாதநா தன்கிடைக்கு நச்சினா னச்சினான்
வேதவே தன்சபரி மெச்சினான் — கோதிலா
ராவா ரச்சபையி லாடுவா னாடுவான்
பாரபா ரன்சுருதி பாடுவா — னீருடுத்த ௯௦
வன்னமே யன்னமா வன்னத்தா னுமருப்புச்
சின்னமே சின்னமாஞ் சின்னத்தான் — பின்னை
மணவாளன் வாளன் மதுசூதன் சூதன்
குணவாளன் புட்கோபன் கோப — னிணமே
பராவு கலப்பை பரசுசர சாப
விராம னிராம னிராம — னராவிற்
படியளப்பா னெற்கும் படியளப்பா னண்ட
முடியளப்பா னென்று முடியா — னெடிய
வடமா மலையான் வரத்தா னெதிர்கொள்
வடமா மலையான் வரத்தான் — படிபஞ்ச ௯௫
பூதங்க ளப்பன் புராணமறை நூற்கப்பன்
மூதண்ட ராசிக்கு முன்னப்பன் — வேத
முனிவருக்கு மப்பனொரு மூவருக்கு மப்ப
னனைவருக்கு மப்பனா மப்பன் — றனதாந்
திருப்பதியி லாழ்வார்தந் தீர்த்தமும்பூங் காவும்
விருப்பு மடிப்புளியின் வீறும் — பொருப்படியிற்

கோபுரமுந் தண்ணீர்க் குளிர்மண்ட பத்திரளு
மாபெரிய வேற்ற வனப்பாடுஞ்—சோபனஞ்சேர்
சிற்றேற் றமுநார சிங்கர்கோ விற்கிரியும்
பற்றேற்ற வேணிப் பழுக்குன் றுஞ்—சுற்றேற்ற கOO
முந்தியகா ஞாறு முழுங்கான் முறித்தாளு
மெந்தைகிரி யன்னைக் கிருந்தாளு—மந்தத்
திருமதிலும் பட்டணமுந் தெய்வத் தெருவுந்
தருவனமுஞ் சாரலுஞ்செஞ் சாந்துங்—குருகினமுந்
தென்ன வனமுஞ் செழும்பாளை யங்கமுருங்
கன்னலு நெல்லுங் கதலியும்—புன்னையிலே
கூவுங் குயிலுங் குளாஞ்சியுஞ்செம் மாதளையு
மாவும் பலாவு மதவேளுங்—காவலரு
மன்னநடை யாரு மரிபிளவும் வெள்ளிலையும்
பொன்னு மணியும் புழுக்கலுஞ்—சன்னிதியுஞ் கO௫
செங்கே தகையுந் திருக்கோனே ரிக்கரையுங்
கொங்கேறுந் தென்றற் குளிர்காற்று—மெங்கேயுண்
டாரே யினிவே றலங்காரம் பாவோ
ராரே பிறர்கொண் டலங்கரிப்பா—ரூரே
பரமபத மிந்தப் பசையிரா தென்றே
மரகதவெற் பன்மலைக்கு வந்தா—னரிகரியென்

## பவனி.

றெம்பிரான் கம்பத் தெடுத்தா ளிறகனகைக
கொம்பிழிவ தென்னக் கொடியேற்றி—யம்புயனூர்

செய்யபுரட் டாசித் திருநாளி லேயொருநா
ளெய்தியவை குந்தத் தினுமிழிந்து—கைதந்து   கக0

வாழுந் திருமா மணிமண் டபத்திருந்தே
யாழுந்து கைய ரிருபாலுஞ்—சூழப்

பழம்பணியுங் குங்குமமும் பங்கயமின் பாதச்
செழுஞ்சவடுந் தண்புழுகுஞ் செச்சைக்—குழம்பாய்

நிறைந்தவெலா நீக்கிமணி நீலமலே யாக்கி
வெறும்புறத்திற் காட்சி விரும்பி—யறங்கிளருஞ்

செய்யா ணகக்கூர் தெரியவோ வெண்ணெய்தயிர்
நெய்யா டியமுடையை நீக்கவோ—கையார

வாகரய கங்கையுட னம்பொற் கடாரநீர்
நீகார நற்கலச நீராட்டித்—தோகையோ   ககரு

டொற்றுடைமெல்ல வுலகலேயா தேயொத்திச்
சிற்றுயர் தாமபின் செயலெண்ணிப்—பொற்றூரி

ல்ள்ளியப்பு கற்பூர மஞ்சனவெற் பிற்சாத்தி
வெள்ளிவெற்ப தாக்கி விசாலமாய்—வெள்ளிவெற்பை

யஞ்சனவெற் பாக்கவே யாரப் புழுகொழுக்கி
மஞ்சரியுஞ் சின்ன மலர்தூவிச்—செஞ்சுடரின்

பன்னிரண்டு சூரியரும் பானுகுலத்தே பிறந்தாற்
கென்னசெயத் தக்கோ மெனவெண்ணிப்—பொன்னின்

கிரணு வலிதொகுத்த கேண்மையென மின்னத்
தருணு ருணமகுடஞ் சாத்தி—யிரணியவி சஉ0
லம்புடனே வந்ததென வம்மவுலிச் சூரியர்கள்
விம்பமெனக் கோரம்ப மேற்கட்டி—யும்ப
ருலகளந்த காலத் துடுப்படிந்த தென்னத்
திலகமணி விம்பந் திருத்திக்—கலைகுறைந்த
தண்பிறையு மீசன் சடைப்பிறையு நாணவே
வெண்பிறைநா மத்தை விதானித்துப்—பண்புமறை
யெத்தோடு மாழ்வா ரிசையிருந்த பண்டாரத்
தத்தோடு முத்தோ டலங்கரித்துச்—சித்ரமதி
மண்டலத்தைக் கீறி வருமுபய பானுவெனக்
குண்டலத்திற் காந்திக் கொழுந்தோடக்—கண்ட கஉரு
மொருதானே மூன்றுலகு முண்பதற்குக் காட்டும்
விருதாந் திருச்சரத்தை வீக்கி—யருணவெயிற்
சேகுபுரி குண்டலமாஞ் செங்கதிரை வெற்பிலும்பாய்
போகியென வாகு புரிகாந்த—மாகும்ப
வெங்கதமா தங்க விடங்கமணிக் கிம்புரிபோ
லங்கதமா தங்க வணிபொங்கத்—தங்களிலே
நங்கணங்க ளுதனென நாகரெலா மீன்றமணிக்
கங்கணங்க ணின்று கதிர்வீசச்—சங்கநிலா
சக்கரத்து வெய்யிற் சமராடு மார்பிலே
புக்கிருந்தா ளூசல் புனைந்தாட—மிக்கநறைத் கரு0

தண்டுழாய் மாலை தழுவு நிலாக்கோவை
வண்டுழா அ நின்று வனப்பெய்த—வண்டடங்க
ளுள்ளிருந்த விம்பமென வொண்மழைக்கு ளாலியெனத்
தெள்ளியமுத் தாரத் திரணெருங்க—வள்ளல்
கருங்கடலின் பத்திக் கனகநவ ரதநத்
தரங்கமெனப் பல்பதக்கஞ் சாத்தி—யருங்கலச
வட்டமுலை தாங்குதிரு வந்திருக்க மார்பிலே
யிட்டமணி பீட மெனவிளங்கச்—சிட்ட
ரிலக்கணத்தி லேந்துமறு விந்திரைதன் கொங்கை
மலைக்களப கத்தூரி மானக்—குலத்துளவும் கஙரு
பொற்பூணு நூலும் புரிநூலு மேகத்துள்
விற்போல் விழிக்கு விருந்தோம்ப—நற்பணிலப்
பாலடையின் பாலுதரப் பல்லுயிர்க்கும் பாய்வதுபோன்
மேலுடையே காச மிளிர்ந்தசைய—நூலோன்
புடைத்தெழுந்த வுந்திமடுப் பொற்றா மரையிற் [கை
சுடர்க்கொடிபோற் பொன்னரைஞாண் சுற்றி—யடுக்குல
யொட்டியொட் டானிடையி லொட்டியா ணத்தரைநாற்
பட்டிகையாற் கட்டிப் பரிசித்துக்—கிட்டவே
கச்சிறுக்கிச் சீறுவுங் கட்டிக் கருதார்தங்
கைச்சிறுக்கி மார்நாசி கம்பிக்கத்—தைச்சவிழிப் கசய
போதாள் சருவுமெனப் பூவிருந்த பொற்றுடையைப்
பீதாம் பரத்தாற் பிறம்பேணிப்—பூதலத்தி

லெங்களுக்கு மெமமை யெழுதினு ரைப்படைத்தார்
தங்களுக்கு மூதாதை தாளிலே—மங்கலபபொற்
செஞசதங்கை பூட்டியிளஞ் சேயாக்கித் தேவரெல்லாந்
தஞசதங்கை கூப்பிச சரணென்ன—மஞசரிய
வெண்டையமுந் தண்டைகளு மின்னேட முன்னேடிச்
சண்டையிடு மாபோற் சலசலெனப்—பண்டித்
தரையளந்த சேவடியைத் தானளந்தோ மென்று
திருவடியி ணைங்கித் திகழுத்—துருவியொளி கசரு
சன்னபின்ன லாகத தைந்தபராஞ் சோதியுரு
வின்னதென வையமிசை விக்க—வுன்னவே
சந்திரநீ லோற்பலமாயச சாத்தியகோ ரம்பமதை
யிந்திரன்கா ணிக்கை யெனவீந்து—வந்தவுணர்
சாராம லோதித் தரைகிள்ளிப் பூவைமார்
நீராஞ சனமெதிரே நின்றேந்தி—யாரேனு
மெண்ணுது தன்னுள்ளே யெப்பொருளுங் காட்டிறைக்குக்
கண்ணுடி காட்டியிணை காட்டியே—யண்ணல்வழி
வாராம லின்றைமட்டு மன்னிய தென்மங்கை
யூரானை முன்னை யுடன்படுத்தி—பாரணத்தான் கருo
மங்கலகி தத்துதியால் வைகா னசவிதியா
லங்கரங்க வைபோகத் தர்ச்சித்துப்—பைங்கழியோ
டாறு சுவையமுத மாயிரகோ டித்தளிகை
நாறு முகமாய் நுகர்ந்தருளி—வீறெலலா

மேவியடைக் காயமுதம் வெள்வெற் றிலையமுதந்
தேவியரோ டேயயின்று சீராடிப்—பூவைமீ

ரண்டருடன் பொற்கோயி லாலயங்கள் பொன்வெள்ளி
மண்டபங்க ளாயிரக்கான் மண்டபங்க—டொண்டர்செயும்

பல்சிறப்பு மண்டபங்கள் பார்ப்போம் பவனிக்கு
வல்விரைந்து பல்லக்கில் வாருமெனச—செல்வரிசை

பூரி சொரிந்து புராணமறை யோர்வாழ்த்த
வீரமணிக் கேடகத்தின் மீதேறி—வாரியென

வொற்றை முழங்க வுபரிடங்க ளார்ப்பெடுப்பச
சுற்று மலாசொரியத் தோன்றியே—வெற்றிநிறை

செண்பக வாசலிலே தென்றலுலா முன்றிலிலே
பண்புலிபீ டத்தின் பரப்பிலே—தண்பனிநீர்

வீச வுலாவி விளங்குமணி வைகுந்த
வாசலெழிற் கோபுரமும் வந்தெய்தித்—தேசுபொழி

வச்சிரத தட்டு வயிடூரி யப்பலகை
பச்சை யிருசு பவழத்தா—லசசுப் க௬0

பதுமரா கக்கொடிஞ்சி பன்னகமா ணிக்சங
குதிகொளா ணிக்கனக கும்பங்—கதிரிலகுங்

கோமே தகமகுடங் கோலமெலாம் பொற்கலிங்க
மாமேரு வொத்த மணித்தேரிற்—றமே

திருமார் பிரியாத தேவியுட னேறி
யிருதேவி யார்க்கொருதே ரீந்து—முரசதிரப்

பேரிமுழங்கப் பிளந்ததய னண்டமெனத்
தூரியங்கள் கோடி துவைத்தார்ப்பக்—காரளவி
யிந்திர வட்டத் தெகினம் பறந்ததெனச்
சந்திர வட்டந் தழைதந்தாடப்—பந்தரிடுஞ் கசுஅ
சேருடிப் பிச்சஞ் செழுங்கொடிக ளண்டத்தி
லாருடி யப்பா லசைந்தாட—மாருடி
மெத்துதவ ளக்குடைக்கீழ் வெண்சா மரைக்கற்றை
சுற்றுநிலாக் கற்றை சொரிவதென—வெத்திசையுங்
கட்டியத்தர் வேத்திரத்தர் காளாஞ் சியரடைப்பைப்
பெட்டியத்த ரெங்கும் பிறங்கிட—மட்டுமலர்ச்
சேனைத் தலைவர் திருப்பிரம்பு தேவர்பெருந்
தானைத் தலைவர் தமைச்சாட—ஞானத்
திருவடியார் தம்முடனே செம்மலரிற் பிள்ளை
யருமறையா லாசி யறையத்—தருவனத்து கஎ0
வாச மலர்மழைபோல் வானவர்கோ மான்சொரிய
வீசெரி காள விளக்கேந்தப்—பாசதரன்
பொற்றண்ட ரோடே புகுந்து திரள்விலக்கப்
பற்றி நிருதி பணிபோற்றச்—சுற்றும்
வருணன் பனிநீர் வழங்கிவர வாயு
விரவியொளி ராலவட்டம் வீசப்—பொருள்சுமப்போன்
பேரல வளகேசன் பொன்கொழிப்ப வீசானன்
கோல நடனருடன் கூத்தாடச்—சீலமுடன்

வெங்கதிருந் தண்கதிரு மீதிற் குடைகளுடன்
செக்குடையாய் வெண்குடையாய்ச் சேவிப்பப்--புங்கவருஞ்
சோகமறு நித்திய சூரியரு மீரேழு
யாக வதரும் பணிந்தேத்த—வாகைப்
பெரியாழ்வார் பொய்கையார் பேயார்பூ தத்தார்
பரியார் பரமபதம் பாய்ந்தார்—விரிமறையோ
ராயிரமாச் செய்தா ரணிமழிசை யாரரங்கர்
கோயிலெலாங் கண்டுபதங் கூடினார்—தூயசெழும்
பத்த ரடிப்பொடியார் பாணனார் தென்குருகூ
ரத்தரையே பாடி யருள்பெற்றார்—முத்தி
யெதிராச ராச ரெதிரே கருணை
முதிரா நயனநீர் மூழ்க—விதிவழியாய்த் ௧அ௦

தேடித் திரியுந் திருமுடியி லேயொருத்தி
சூடிக் கொடுத்த தொடைவீசச்—சேடகிரி
யச்சுதனார் செங்கோலு மப்பன் கருகூல
லச்சினையு மேந்தி யிருபோது—நிச்சயமாய்
வாகாய தெய்வீக வைபோக பாரகராய்ச்
சீகா ரியஞ்செய்வோர் சேவிப்ப—நாககிரி
மாற்குந் திருப்பதிக்கு மண்டபத்தின் முன்வரிசை
யேற்கு மெழுபத் திருவோரு—நாற்கரனை
யேத்தெட்டு வானற் கினையாகி யச்சுதனார்
நூற்றெட்டு வர்க்கத்து நூலோருஞ்—சீர்க்கருணை ௧அரு

மாறுமலர்ச்சனைசெய் வைகானசச்சரிதை
யாறுனகொத்தோ ரனைவோரும்—பேறுன
கேள்விப் பெருமுக்கோல் கேசவன்செங் கோல்செலுத்தி
வாழ்வித் திடும்புய மாதவரும்—வேள்விச்
சுருபார்க் கலர்மாரி தூவியவே காங்கி
யிருபத்து நால்வ ரினமும்—பரிவுற்றுச்
சங்காழி யொத்தியெமைத் தாங்குமெழு பத்துநாற்
சிங்கா தனத்திருந்த தேசிகரு—மிங்காரு
நைவீணை நால்வேத நாதமுனி கோத்திரத்துத்
தெய்வீக விண்ணப்பஞ் செய்வோரு—மெய்வீதித் கக0
தோரணிக்குந் தெய்வத் திருப்பதிக்கு மாதியாம்
பேரெழிற்புல் லாணிப் பெருமானும்—பாரறிய
வஞ்சனைவெற் பாளற் ககலாம லூழியஞ்செய்
மஞ்சனகா லத்திரா மாநுசனும்—கஞ்சனெனச்
செங்கையெழுத் தாணித் திருவாண் டெழுத்தெழுது
மெங்கடிரு நின்றையோ ரெல்லாருந்—திங்கள்வழி
செற்கோல மேனியனூர் செண்பகவா சற்காக்கும்
பொற்கோயில் கைக்கோளப் புண்ணியரு—மற்காலஞ்
சீராட்டி யாட்டித் திருவந்திக் காப்பெடுத்துத்
தாராட்டி நாவோர் தமிழ்காட்டிப்—பாராட்டி ககரு
வாளம் படைத்து வசிகரித்து மன்மதனை
யாளெம் பெருமா னடியாரு—நாளுமவர்

மன்ற லளக மணங்கூர் மகரந்தத்
தென்றலிலே யேறிவருஞ் சித்தசனு—நின்றநிலைப்
பத்துடனே நாலாய்ப் படைத்தபுவனப்பத்திக்
கொத்தடியா ராருங் குழாங்கொள்ளச்—சத்துருவாங்
கோதமனை யிந்திரனார் கொண்டாட நாலுமுக
வேதன் றிலோத்தமையை மெச்சியிட—வோதக்
கடலேந் துலகமெலாங் காத்தபிரான் வந்தான்
வடவேங் கடத்தரசு வந்தான்—றொடர்கதியைக் ௨௦௦
கைமாவி னுக்குமொரு காலமா வென்றருள்சே
வைமாத வப்பெருமான் வந்தான்—பைமா
வனந்த கருடா சலத்திருப்பான் வந்தான்
மனந்தனிலே வீற்றிருப்பான் வந்தா—னினைந்து
பொழிவிழியா னந்தப் புலவர்பிரான் வந்தான்
வழிபுழுகு மெய்யுடையான் வந்தா—னழகொழுகு
நீல மலைகுனிய நின்றபெரு மான்வந்தான்
மாலை யணிந்திலகு மால்வந்தான்—வேலைப்
புடவிலய மாகாமற் பொன்னுதரந் தாங்க
வடவிலையி லேதுயின்றான் வந்தான்—கடல்கடந்த ௨௦௫
சீராமன் வந்தான் சிவனே செபித்தாலும்
வாரா திருந்தான் வரவந்தா—னேரலர்மேன்
மங்கை மணவாளன் வந்தான்வந் தானென்று
பைங்கனகச் சின்னம் பணிமாறக்—கொங்குலவு

## குழாங்கள்.

பொன்மறுகி லேயுலவும் பொன்னாட்டுப் பூவைமார்
தன்மகர சாகரத்துத் தையலார்—மின்மழைக்கா
யேந்துருடை யிற்பிறந்தோ ரின்பவணை யிற்பிறந்தோர்
காந்தருவ கிம்புருட கன்னியர்—மாந்தருறை
மண்மகளி ராகி மழைகாண் மயிலினமோ
தண்மழலைச் சாதகத்தின் சங்கமோ—கண்முகங்கால் உ௧0

கஞ்சவன மென்னக் கதித்தெழுமன் னங்களோ
சஞ்சரிகப் புஞ்சச் சமூகமோ—கஞ்சமுகந்
திங்க ளெனவே திரண்ட வுடுத்திரளோ
தங்களிலே கூடுஞ் சகோரமோ—மங்கையரோ
வென்னமணி மண்டபத்தி னேழுநிலைக் கோபுரத்திற்
சொன்னமணி மாளிகையிற் சூளிகையிற்—பொன்னரங்கிற்
சாலைகளிற் சந்திற் சதுக்கத்தில் வேதிகையிற்
சோலைகளிற் பெண்பெருத்த சோலையாய்—மாலைத்
தகையீர் திருத்தேரைத் தாங்கீ ரிருகை
முகையீர் முலைக்களிற்றை முட்டேர்—வகையீர் உ௧௫

பெருமானை யென்பார் பெருமானை யெய்தார்க்
கிருமானை யுங்கொண் டெதிர்ப்பார்—பொருமானைக் (பார்
கொம்பொடித்தார் தம்மைமுலைக் கொம்பிற் பொரப்பார்ப்
வம்பொடித்தார் தாராரோ மற்றென்பார்—வெம்பொடியா

கொடிவழியி லேயங் குறித்தகொடி யாழ்வார்
தடமருவு சொற்றிருந்தாத் தத்தை—வடமலையிற்
கண்ணன்கோ னேரிதனிற் கஞ்சத் தருணமுகை
விண்ணவர் தீர்த்த விரைத்திவலை—பெண்ணின்முளை ௨௪0
யந்தியிள வெய்யி லளிப்பிள் ளைகளென்னக்
கொந்தளவு செய்யகருங் கூந்தலாள்—பந்திச்
சிரந்துலைந்து மீண்டுந் திரும்ப விலங்கேச
னிரந்துவரங் கொண்ட வெயிற்றாள்—பரன்கிரியிற்
சேணுலவு விஞ்சைச் சிறாரின் விரல்குழைப்ப
வீணையிசை யென்ன மிழற்றுவாள்—பேணியரி
கையமைத்த பாங்கிற் கலியாக் கருங்கடலா
யையமெடுத் தானடக்கு மாலமாய்—வெய்ய
சிலைபுகா வம்பாய்த் தினையளவுங் காமன்
கலைபுகா மானிருந்த கண்ணா—ளிலகுமணிக் ௨௪௫
குஞ்சரக்கோ டிற்ற குறைகண்டோ மால்குடையாய்ச்
செஞ்சிலம்பு வாங்குஞ் செருக்கண்டோ—கஞ்சனணி
மாமகுட பங்க மதித்தோ வரக்கன்மக
ளோமகுட பங்கத்தை யுன்னியோ—தாமே
யிளைக்க முளைக்கவுரத் தென்றாளே வேறாய்
முளைக்கவிசா ரித்த முலையாள்—வளைக்கவரு
மைக்கூந்த லன்னையர்க்கு வாய்முத்த மீவதற்குக்
கைக்கூலி கேட்குங் கருகூல—மெய்க்கூர்ந்து

சுற்ற முருகமணற் சோற்றுக்க லாராய
முற்றி லெடுத்துலவு முன்கையாள்—சற்று உருo
மெழுதரிய மேனி யிளகவிளை யாடிப்
புழுதிக்குள் மாணிக்கம் போல்வா—ளழுகியதன்
பாவைவா யைத்திறந்து பால்புகட்டீ ரென்றீன்ற
பூவையர் முன்னம் புலம்புவாள்—கோவைவா
யேதோ சொலச்செங்கை யேதோ செயத்தானு
மேதோகண் டேதோபெற் றெய்துவாள்—மாதோ
முறுவன் முகத்துமிழன் முன்னோட வோடிக்
குறுக மிதித்துக் குழைவாள்—சிறுகூழின்
மண்ணிற் குழமணத்தாள் வைத்தூட்ட மண்ணுண்டான்
வெண்ணெய்க் குழமணத்தான் விண்ணுண்டான்—கண்ணக
ராலி னிலைக்கு மசோதைக்குந் தேவகிக்குங் (னீ
கோல விரேணுகைக்குங் கோசலைக்குஞ்—சீல
வதிதியன சூயைக்கு மன்பிலாப் பேய்க்கு
மதலை யுததிக்கு மருமான்—சதுமறையின்
கண்ணிலே பாணியிலே காலிலே கந்தனிலே
மண்ணிலே பாவகத்தே வைகுவான்—பண்ணைத்
தருங்குழலாள் பாஞ்சாலி தன்குழலைக் காத்தான்
மருங்குழலா தேயெமக்கு வாய்த்தான்—கருங்குரிசி
லாதியொரு காதிமக னாதரவேள் விக்கழைத்த
சோதி விருந்திவருந் தூதினன்—கீதையுரை உசுo

நித்தன் மலைகுனிய நின்றான் வடமலைமேற்
சுத்தன் பசுந்தேரிற் றோன்றினான்—னித்திருவைக்
கைத்தாயர் மொய்த்தார் கடிதெடுத்துக் தேரிலே
வைத்தார்முன் காணிக்கை வைத்தார்போ—னாய்த்தார்
வணங்குவித்தார் கண்ணால் வடிவழகர் தம்மை
யணங்குவிற்றோம் பாரென் றனைத்தா—ரிணங்குமிளங்
கன்று பயமறியாக் கட்டளையெல் லாமறிய
வன்று புதுக்கினா ளப்பேதை—நின்றிவளைத்
தாருமெனக் காட்டியகை தன்னைப்பா ராண்மருங்கிற்
சேருமெனக் காட்டியகை சிந்தியா—ளாரமணற் உசரு
சிற்றிலுக்கு வேண்டியயற் செங்கைவளை யைக்கேட்டாள்
பெற்றுகந்தா ரம்புலிபாய்ப் பேசினார்—மற்றொருகை
யாழியே தென்று ளணிவிரலைக் காட்டாம
லேழை பருதிகா ணீதென்றார்—தோழிபோன்
மீதிலுற்ற மின்னை விரும்பினாள் வேங்கடவர்
காதலுற்ற பொற்பாவை காணென்றார்—மாதரீர்
நற்பாவை யானக்கா ளுடைத் தாருமெனப்
பொற்பாதங் கொண்டு புவிபுடைத்தா—ளற்பாத
மேதாம் புவிக்கின் றிளங்கிளியே பாரீன்ற
மாதா வவளலர்மேன் மங்கைகாண்—வேதாவைப் உஎ0
பெற்றவள்கா ணீயும் பெருந்தவங்கள் கூடினான்
மற்றதிலே வாழ வருவாள்காண்—சிற்றிலிலே

யாயிரம்பொற் பாவையுனக் காடத் தருவமெனத்
தாயர் கொடுநடந்தார் தாங்கியே—தூயதளிர்
கட்க மதனூர் கருடா சலமெனவே
புட்குதிரை தானோடிப் போயதோ—வெட்கியே
சேடகிரி யீதென்று தென்றற்றே ருங்குடையுங்
கூடவர வஞ்சிக் குலைந்ததோ—நாடறிய
வீழப்பொற் சிங்ககிரி யென்றிபத்தின் பேர்கொண்ட
வேழச் சிலைமுறிந்து விட்டதோ—மாமைநிறச் உஎரு
செந்நாண் மலர்சொரியுஞ் செண்பகவா சற்கண்டு
வின்னாணலாஞ்சிதறி விட்டவோ—வன்னோதான்
றன்னை யொழித்துச் சரந்தொடா தேபோனா
னங்கெடுந்தேர் சென்ற தயல்வீதி—பின்னும்

## பெதும்பை.

அறிந்து மறியான்போ லயோத்தியிலே யையன்
பிறந்து நடந்தன்ன பெதும்பை—நிறைந்தகலைத்
திங்களெழப் பானுவிழுஞ் செம்மாலை யஞ்சந்திப்
பைங்குவளை யன்ன பருவத்தா—ளெங்கைப்
பொருளனையான் கோனேரிப் புன்னைமர நீழற்
குருளையிரு ளன்ன குழலா—ளருளுடையா உகூ0
னின்னமுத வில்லத் திளங்களவு போற்சிறிதே
கன்னமிட நாளாயுங் கண்ணினாள்—வன்ன

முருகரும்பு வாய்க்கரும்பு முத்தமெல்லாங் கிள்ளைக்
குருகருந்த வீணை கொடுப்பா—ளருகு
வரிசை மழலைமொழி மாறிவர வேறே
யுரிசை பிறக்கு முரையா—ளரசை
முறித்திடுமுக் கூனி முதுகூனி கூனைக்
குறித்தவுண்டை யன்ன குயத்தாள்—சிறுத்தபிடி
யன்ன நடைக்கு மரவகிரித் தெள்ளருவி
யன்ன நடைக்கு மடிகொண்டா—டன்னிலே உஅரு

யின்ன வவயவத்தாக் கின்ன பணியிசையு
மென்ன வறிவதற்கோ ரெல்லையாள்—கன்னலிளங்
கோமளமுஞ் சாமளமுங் கொண்டாட்ட மும்மிரத
மாமளவைப் பார்ப்பிக்கு மங்கத்தா—டாமரைகள்
பூத்த புனற்சாமி புட்காணி யங்கணத்தைக்
காத்த பரிமளப்பூங் காவிலே—யேத்தருளி
யிட்ட பளிங்கி னெழிற்பீடத் தேதவள
வட்டமதி மான்போல வந்தேறிக்—கட்டக்
கருவேழ முற்றுமற் காத்தபிரான் வெற்பி
லிருவேழ முத்தமெலா மீட்டிப்—பருவேழு
பொற்பூங் கழலேந்திப் பூங்கையிலே யன்னைமார்
கற்பித்து வைத்த கழற்பாடற்—சொற்பத்தி
யற்புத னப்ப னரசிருக்கு மத்தாணிப்
பொற்பு ணிரதப் புளியொன்றும்—வெற்பிற் உகூ0

செழுந்திருமா லேறுந் திருப்பதியோ டங்கொண்
டெழுந்திருக்கோ னேரி யிரண்டுங்—குழிந்து
குழக்கொண் டுலகமெலாங் கோவிந்தா வென்று
முழக்கி வருவழிகண் மூன்றுந்—தழைக்கு
நெடுந்தகை வேங்கடத்து நித்தத் திருநா
ணடந்த விழாவீதி நான்குங்—கடந்தபொரு உ௯௫
ளன்புடைநா மத்தாரு மப்பரிநா மத்தாருந்
தன்புடை நாமத் தடமைந்தும்—பொன்படைக்கு
மென்னை யுடையானை யேத்தச் சிவனேவு
முன்னை யுடையான் முகமாறுந்—தன்னையுந்தன்
பொற்கனகக் கோயிலையும் போற்றவரு வாரொழுங்காய்
வற்கமுட னேறு மலையேழு—முற்கூறி
யண்ட மளந்த கழலென்று மன்றுகுகன்
கண்டு பணிந்த கழலென்றுங்—குண்டிகையின்
மங்கல நன்னீர் மணந்த கழலென்றுங்
கங்கை பிறந்த கழலென்றும்—பொங்கரவி ௩00
லாடுகழ லென்று மருமந்த தம்பியுடன்
காடு புகுந்த கழலென்றும்—நாடதற்கு
வல்லே நடந்தகழல் வன்சகடு சாடுகழல்
கல்லேந் திழையாகக் கண்டகழல்—எல்லையற
வேதந் துதித்தகழல் வெண்ணெய்க்கூத் தாடுகழல்
மாத ரிருவர் வருடுகழல்—மூதண்டம்

பற்றுகழல் பற்றிப் பாதன் சுமந்தகழ
லிற்ற கருவை யெழுப்புகழல்—வெற்றி
பரவுகழ லென்றென்று பாடி யவளாட
வரிவையர்கள் கையமர்த்த வாங்கே—யொருவ ௩0௫
னிமலன் மலேகுனிய நின்றகழ லாள
னமலனலர் மேன்மங்கை யாளன்—கமல
நயனத் தயனத்தன் ஞானத்தன் முத்தன்
சயனத் தயனத்தன் சாந்தன்—வியனத்தன்
செக்க ரெரிகுஞ்சிச் செம்மூ விருகோணச்
சக்கர மேந்துந் தடக்கையா—னக்கன்
றலேதடவ வந்தவனைச் சாய்த்தான் கனைகன்
புலேதடவு சோரிப் புயத்தான்—தொலேயாப்
பிறப்பலேக்கு நாவாய் பிணிமருந்து கற்றோர்
சிறப்பு மறைபடித்தோர் செல்வ—மறப்பிலா ௩௧0
ஞானக் கொழுந்து நமக்கெல்லாம் பேரின்ப
மீனச் சனைமயர்க் கெதிராணி—வானத்தி
னுடிக் கொடித்தே ரணுகுதனு மன்னகழங்
காடிக் கொடியைக்கொண் டன்னமா—ரோடித்
தொழத்தொழுது நின்றுளேத் தோகையவர் காணுங்
கழற்பெருமா னென்றூர்கள் கண்ணால்—விழித்துறவே
பூமகளின் வாழ்க்கை பொருமலோ பொன்னூச
லேமமணிமார்பை யிச்சியாள்—காமன்

புனமாலை தன்னிலொரு பூத்தொடா னென்றே
வனமாலை கண்டு மருளா—ளினமாலை ௯௧௫
பார வுரத்திற் பருமுத் தெலாம்பொறுக்கித்
தாருவ கழலாடத் தானென்றாள்—காரிகையே
சேய்முத்த நீகேட்டாற் செங்கனிவா யெம்பெருமான்
வாய்முத்தந் தாவென்று வந்தாலோ—தூய்முத்தச்
சங்களையுஞ் செங்கையான் றாரங்க ளைச்சுமப்பா
னெங்களையுந் தெட்டியுனை யேற்றாலோ—கொங்கை
முளைத்துமுளை யாமுன் முதுக்குறைவு தந்தா
னளைத்திருட னென்றே யவளை—வளைத்தெடுத்துத்
தாங்கி மனைபுகுந்தார் தற்பரன்ற னன்மலைப்பூ
வாங்கினவன் வாங்காமல் வைத்துவிட்டான்—வேங்கடவா.
தேருந் தனித்தனியே தேவா தியரெல்லா
மாரும் பொருளே யமுதமே—பாரினு
டாடிச் சுரந்தொழுகி யன்பரெனுங் கன்றுகளைத்
தேடிக்கொண் டோடிவருந் தேனுவே—நாடித்தன்
றஞ்சப் பரிசனமாஞ் சாலிக் கொழுந்தெழுந்து
விஞ்சச் சொரிகாள மேகமே—நெஞ்சத்திற்
கொள்ளுந் திருவடியார் குற்றமெனுஞ் செத்தைகளைத்
தள்ளுந் தரங்கச் சமுத்திரமே—புள்ளென்ன
வண்டினங்க ளென்ன வழிபடுவார் தற்சூழ்ந்து
கண்டு களிக்கின்ற கற்பகமே—தெண்டனுடன் ௯௨௫

சேவிப்பார் சிந்தைத் தியானு பரணத்தே
தாவித்த சோதிச்சிந் தாமணியே—பாவித்து
மன்றுடு பத்தர் மனமிடியை யோட்டுதற்கு
நன்றாக வாய்த்த நவநிதியே—யென்றேத
நீண்ட கிரண நிறைமடவா ராபரணம்
பூண்ட வயல்வீதி புக்கதா—லாண்டொருத்தி

### மங்கை.

செங்கைமதன் செங்கோற் செலுத்துமுத லாரம்ப
மங்கை யெனவே வருமங்கை—யங்கவன்கைக்
கேதனமுந் தேருங் கிளிக்குதிரை யுஞ்சிலையுஞ்
சாதனமு நூதனமாய்ச் சாதிப்பாள்—கீதவரி ௩௰
வண்டை யழைத்து மணத்தார் படிநடத்திக்
கொண்டை முடித்துக் குடிவைத்தா—ளெண்டிசையு
மன்னிப்போ ரஞ்ச வருந்தா டகைமடிந்த
கன்னிப்போ ரம்பனைய கண்ணினா—ளுன்னிப்போர்
சிந்தை யுருகச் சிலையுருகத் தேனொழுகு
மெந்தை குழலிசைபோ லின்சொலா—ளந்தக்
கனகமணித் தேர்முகையாய்க் கண்ணனங் கிரிக்கே
முனைகுவிந்த கோங்கின் முகையாய்த்—தினமுந்
திரட்கடலா யப்பனடி சேவிப்பா ருச்சி
முரட்கடகச் செங்கை முகையா—யுரத்திற் ௩௫

பகையா முகமதியைப் பார்த்தலராக் கஞ்ச
முகையாய் முகிழ்த்த முலைபாள்—மிகையாகி கூ௪0

லற்றைப் பிரளயத்தி லாதிபோ லன்னையைவிட்
டொற்றைத் துயில்விரும்பு மூற்றத்தாள்—வெற்றிமதன்

ம்ப்போது மெய்யு முனைப்போதும் போதிலே
யிப்போ திதுசெயயு மென்றறிவா—ளப்போது

வெண்கிரணப் பட்டிழைத்து வெண்ணிலா வூசியிலே
பண்ணிளவி பஞ்சபா ணப்பாணன்—கண்களிக்கத்

தைத்திறைஞ்சிக் காணிக்கை தந்தமணிப் பந்தேந்தி
வைத்த விரற்பவள வல்லியாய்—மொய்த்தவிழி

நீலமாய் மூர னிரைவயிர மாய்நாங்க
ளேலவயி டூரியங்க ளென்னவே—சீலித்த கூ௪ரு

வாளிக் குழைக்கனக மாணிக்கச் செய்கதிருந்
தோளிற் கடகச் சுடர்க் கொழுந்தும்—பாளிக்கக்

கைக்கு வளைபுலம்பக் காற்குச சிலம்பார்ப்ப
மைக்குழலுக் கேயெழுந்து வண்டார்ப்பப்—பொய்க்கு

மருங்கு மருங்கெனவே வண்காஞ்சி பொங்க
விரங்கி யளித்தமத னேங்கச்—சுருங்கி

யெழுந்து மிருந்து மிளைத்து மிளமேனிக்
கொழுந்து வருந்தக் குழைந்து—நுழைந்து

விழிகுழையி லேபுரள வெப்புறத்தைச் சாய்த்துச்
சுழலுறவே நின்று சுழன்று—நிழனிழ ௩௫0

லாய்ப்பந் தடித்த தமையுமினி யென்பாரை
வாய்ப்பந் தடித்து மலைந்தாடத்—தாயப்பந்தி

யன்னமே தோகையே யாரணங்கே பொற்கொம்பே
பன்னிகிளியே மானே பசுங்கொடியே—மின்னரசே
யிந்த முலைக்கெதிரென் றெய்தினையோ பூங்குதிக்குத்
தந்த வுவமையெனச் சாடினையோ—பந்து
மடிக்கவடிக் கக்கிளம்பு மத்துடனே வேண்டாம்
பிடித்த முட்டியென்று பிடித்தார்—கொடித்தேருங்
காயா மலரைக் கருமுகிலைக் காக்கடலை
மாயா மயக்கை மரகதத்தைத்—தூய ௩௫௫
களங் கனியைப் பசிலையைக் கண்ணூர் மணியை
வளங் குலவு நீல மலையை—யிளங்குரவை
யோதிமங்க ளெல்லா முகந்தமல ரோடைதனை
நீதி மலைகுனிய நின்றதனை—வீதியிலே
கொண்டு வரவுங் கொடியும் பிடியெனப்போய்க்
கண்டு பிழிதொன்றுங் கண்டாளோ—புண்டரிகப்
பாணியே செங்கமலப் பாதமே கஞ்சமயன்
காணியே தாமரைச்செங் கண்களே—நாணளினச்
செம்முகமே கோகனகச் செங்கனிவா யேயிவைதா
நம்முகமு மோந்துகொள்ள நண்ணுமோ—விம்முலையு

மொற்றப் பெறுமே யுரத்தாள் புறமிருக்க
மற்றப் புறமெனக்கு வாய்க்குமே—பெற்றத்தார்
பெற்றபல னென்றுளத்தே பேசினுண் மன்மதனு
மற்றமனந் தானறிய மாட்டானே—பொற்றொடிநீ
பார்த்த வனசமிதோ பாரென்று வில்லிலே
கோத்து கிணைவிலொரு கோல்விட்டான்—வார்த்தை
மறந்தாள் கலையிழந்தாண் மாமரம்போ னின்று
டுறத்தா ளறிவுவளை சோர்ந்தாள்—பெறுந்தாயர்
பச்சை முகிலின் பவனியிவ ளைப்புதிசா
யிச்சை யறிவித்த தென்றறிந்தா—ரச்சுதரே ௩௬௫

தாளின் மருகன் சலதியிலே யுண்ணவரக்
காள விடமிட்ட கள்ளரே—வாளரே
மைத்துனர்போற் சேயுடனே வற்சா பகரணத்திற்
சித்துவித்தை காட்டுந் திருடரே—சத்திரத்துத்
தேட்டம் படைத்த திருக்கமைய னாகத்திற்
ரோட்டந் தனைப்பிடுங்குஞ் சோரரே—கூட்டுதயிர்
தற்கரமெ லாம்பொசித்த தற்கரரே கோமுனிபாற்
கற்க விருந்தகன்னக் காரரே—விற்கரரே
யாகத் தொருத்தி யமையாதோ தெய்வவனு
போகப் புவிமடந்தை போதாதோ—மோகனமாஞ் ௩௭0
சேயரிக்க ணீளை தெவிட்டாதோ முன்பதினா
றாயிரவர் புல்கியது மாற்றாதோ—தேயமா

மித்திர விந்தை வெகுளாளோ தேவரீர்
சத்திய பாமை சலியாளோ—பத்திரைதான்

வையாளோ சாம்பவதி வம்புரையா ளோபின்னை
நையாளோ காளிந்தி நாணாளோ—செய்ய

வுருக்குமணி நெஞ்சை யுருக்கிவை யாளோ
கருக்க விராதை கடாளோ—செருக்குஞ்

சுகந்தை யிலக்குமணை தொல்லைநாட் கொண்ட
மிகுந்த மடவார் வெறாரோ—புகுந்தெமது ௩௭௫

மங்கையவர்க் குத்தரிக்க வல்லாளோ வென்றவனை
யங்கைதனி லேந்தி யகம்புகுந்தார்—சங்கைத்

தரித்தபிரான் பொற்றேருந் தாண்டியயல் வீதி
யருத்தி யுடனடந்த தப்பா—லொருத்தி

## மடந்தை.

அணங்கெனமுன் பின்பருவ மாறுநடு வைத்து
வணங்கவர சாளு மடந்தை—பிணங்கியே

மாந்தர்க்குப் பேசி வரமளிப்பான் வேங்கடத்திற்
கூந்தற் கமுகனைய கூந்தலாள்—வேந்தன்பா

லன்றுதிரு வாழி யருளினான் வெற்பிலே
நின்று தவழ்பிறைபோ னெற்றியா—ளென்றுந்தன் ௩௮0

கைகுந்தி வைகுந்தங் காட்டுவான் கோனேரிப்
பொய்கைத் தரங்கப் புருவத்தா—ளுய்கைக்கு

வல்வாய் கொடுபலிகை வாங்குவா னுலயத்து
நல்வாயற் செண்பகப்பூ நாசியாள்—வில்வாய்ந்த
கூன்கொண் டதுமிமிர்க்குங் கொள்கையான் பொற்கோயில்
மான்கொண்ட கோல மதர்விழியா—ளூன்கொண்ட
வெள்ளை கருமை விலக்குவான் பூஞ்சுனையில்
வள்ளை யிருந்த மணிக்குழையாள்—பிள்ளையிலாக்
கெண்டைவிழி யார்தமது கேள்விகேட் பான்புனத்திற்
றொண்டை பழுத்த துவர்வாயா—ளெண்டிசையுங் ௧௮௫
கல்லுங் குருடருக்குங் கண்கொடுப்பான் வண்பொருப்பு
முல்லை முகையா முறுவலா—ணல்லறிவை
யென்னிற் சிறியார்க்கு மீவான் சிலோச்சயத்துக்
கன்னிக் கமுகனைய கண்டத்தா—ளின்னுரையை
யூமர்க் கருளு முபகாரன் சிங்ககிரி
யேமக் கழையா மிளந்தோளா—ணாமுடவர்
கைவிஞ்சி யோடவே காலீவான் செஞ்சிலம்பின்
மொய்விஞ்சை யாழ்வீணை முன்கையாள்—பொய்வஞ்ச
ருங்கார மந்திரத்தை யோட்டுவான் காறெற்றி
லங்காந்த செங்காந்த ளங்கையா—ளிங்கார்க்குங் ௧௯0
கொச்சை மிடியைக் குறைப்பான் குலாவுபொழிற்
பச்சை யிளநீர்ப் பணைமுலையா—ண்முச்சகமுந்
தெண்டனிடக் கூடுந் திருநாளை னத்திரண்டு
வண்டொழுகு ரோம வயிற்றி—டொண்டுகொள

முந்திக்க ணூக்காட்டு மூர்த்தியா ணைவனூற்
றுந்திச் சுழிபோலு முந்தியாள்—வந்தவரைத்
தன்னடிமை யாக்கித் தலைமயிரைக் கண்டிப்பான்
வன்னமலை வல்லி மருங்கினாள்—கன்னமிட்டு
வேடு பகிர்ந்த வெறுங்கையான் புட்சயிலத்
தாடு மணிநாக வல்குலாள்—கோடுதொறு ௧௯௫
மேன்று வழிபார்த் தெதிர்கொள்வான் பொன்மலைக்கே
தோன்று கதலித் துடையினாள்—வான்றேயச்
செய்த சிறப்பருந்துஞ் செங்கனிவா யன்கிரியிற்
கைதையல வன்முழங் காலினா—ளெய்தவரங்
கொள்ள விடுவான் குளிர்பாண் டவதீர்த்தக்
கள்ள வராலின் கணைக்காலா—ளள்ளியள்ளி
யுண்பதல்லாற் சேவைக் கொழியாத வாசலான்
வண்பதும வாவி மலர்த்தாளாள்—பெண்பெருமா
ளென்னவமு தென்னமயி லென்னமணி யென்னமதி
யென்னநிதி யென்னரதி யென்னவே—கன்னியிட ௨00
மாடத்து வந்தேறி மாதரா ரிட்டமணிப்
பீடத்தி ருந்தளகப் பின்னலிலே—யாடுகுல
வண்டு சுருதிதர வண்கோகி லக்குலங்கள்
கண்டு பறிகொடுத்தோங் கண்டமென—விண்டு
பவள மசையாமற் பாயுமிளந் தென்ற
லவள திசையோ டசையத்—துவளுநிடை

நொய்யதெ னநாவிலிசை நோக்காம லெல்லோரு
நைய விளரி நரம்போங்கப்—பையவே
பாட முதலிட்டாள் பாவையரெல் லாம்பணிந்து
மாட முருகிவரு மாமயிலே—கூடவரு ௪0௫
மெங்களுக்கா கத்தவிரென் றேத்தினர் வெண்ணிலாத்
திங்களெலாம் பொங்கச் சிரித்திட்டா—ளங்கே
வடவேங்க டத்தரசன் மாமணிட மாமன்
வடவா லிலைதுயிலு மத்தன்—கடலான
நாரத்தன் மாவலிக்கு நல்கியிடு மாதலையான்
பாரத்த லைக்கும்ப லாவினன்—காரொத்த
சந்தனத்தான் கற்றோர் தமரத்தை யான்பொற்றோர்
வந்ததெனச் சின்ன மலைந்தார்ப்ப—வந்தரத்துச்
செம்மாட நீங்கித் தெருவெய்தித் தேராளர்
தம்மா டணுகிச் சரணென்று—ளம்மா ௪௧0
விதுமதனன் றாதை வெகுதூர்த்த னென்றே
பதுமமனைத் தாய்க்குப் பரிந்தோ—கதுவித்
தொழத்தொழவே வெட்டவருந் துட்டரினம்போலே
யழுத்தமல ராலழுத்தி யார்த்தான்—கழுத்தளவு
முற்றித் தலைக்கொண்ட மோகம் பிணிவிடுமோ
பற்றிக்கொள் ளாதோ படுத்தாதோ—வெற்றி
பசந்தாள் பறந்தாள் பயந்தாள் படிந்தா
ளசைந்தா ளலைந்தா ளயர்ந்தா—ளிசைந்தளோ

செங்குவளை தாளெழுக்குந் தெண்ணீ ரொழுக்குடனே
சங்குவளை தாளெழுகத் தானின்று—ளிங்கிவளைப்	சகரு

பாரீரெனவிரங்கிப் பைங்கொடியார் கண்பனித்து
வாரீர் முறையிடுவோ மாற்கென்றார்—நாரணரே

யித்திருவின் கண்முத் திரையாத போதுமக்கு
நித்திலப்பத் தாய நிரம்பாதோ—சித்திரமின்

மெய்த்தமணி வீழாமல் விந்திகை விந்திகையாய்
வைத்த கருகூலம் வளராதோ—பொய்த்தவிடை

நற்கலையை வாங்காம னட்டந் துயிலாதோ
பொற்கலையின் பெட்டி பொலியாதோ—நிற்கப்

பகட்டி லிவளறிவும் பண்பும் பறித்தீர்
புகட்டிவைத்த தெந்தப் புதையோ—தகட்டுமணி	சஉ0

யாடகச்சங் காழி யருளென்றீ ரிவ்வெறுங்கை
வேடனெனும் பேரினிமேல் வேண்டாமோ—வாடையிலே

யிந்தப் பறிபறித்தா லெங்கலிய னார்பறிக்கு
மந்தப் பறிமீண்ட தாகுமோ—முந்துவனந்

தங்குமொரு பெண்பழியைத் தான்செலுத்திக் கொண்டீரே
யிங்குமொரு பெண்பழிமே லெண்ணமோ—நங்கொடியைத்

தேற்றிவிட ரென்றிவருந் தெண்டனிட்டார் கண்ணருளா
லாற்றி யவருமயலகன்றார்—வேற்றொருத்தி

## அரிவை.

காவற் கடவுளையென் கண்பாயிற் பின்னைமட
லேவற் கரிவை யெனுமரிவை—மாவிற்கை சஉரு

மங்கைபங்க ணாலே வளைபடா வேலேந்துந்
துங்கமக னாலே துளைபடா—வெங்கள்

மலைகுனிய நின்றபிரான் வந்தாலு மிந்த
முலைகுனியா வென்ற முலையா—ளலைகடலை

யக்கடலி னஞ்சை யதுவுண்ட முக்கணனை
முக்கணன்கை மானை முரண்மானைப்—புக்கவிடந்

தேடிப் பொருதுஞ் சிலீமுகத்தைச் செம்முகத்தை
கூடிக் கொலச்செய்த கூர்விழியாள்—பாடலிலே

கற்கமது ரிக்கநடை காட்டுஞ் சடகோபர்
நற்கவிதை போலு நடையினாள்—பொற்குடுமி சஙo

நங்கனக வேங்கடத்து நாளும் பழுத்தபலாச்
செங்கனியுஞ் செங்கொளிஞ் சிக்கனியும்—பொங்கிரத

மாங்கனியு முந்திரிகை வண்கனியுஞ் செவ்வரம்பைத்
தேங்கனியு மென்னச் சிறப்பெய்தி—நாங்கனிந்த

சொற்கதலத் தாரமுதைச் சொன்றாலு மிக்கோதை
சொற்கதல வீடென்ற சொல்லினாள்—சிற்கமலை

யுல்லாச வேங்கடவற் கொப்பாரு மிக்காரு
மில்லாது போலுநடு வில்லாதாள்—சல்லாப

மாடக வீணை மதுரவிரற் செங்கனிவாய்ப்
பாடகி வந்து பணிந்தாளே—யேடின் ௪௱௫

பண்ணுக் கழகாம் பதம்போலே பார்க்குமிரு
கண்ணுக் கழகேது காட்டென்றாள்—பெண்ணரசே

வேறு மினிக்காண வேண்டுமோ வேங்கடத்தை
நூறு முகமாக நோக்காயோ—பேறுடையான்
செந்திருவின் வேள்வித் திருமுளையும் பாலிகையு
மந்தவிழிக் கானந்த மல்லவோ—முந்தநீ
யிக்கிரியிற் சேனைக் கிறையை யிறைஞ்சாயோ
சக்கரவேந் தன்பவனி தாழாயோ—மிக்ககொடி
யேற்றங்கா ணாயோ வியற்சேட பீடத்துத்
தோற்றந்தான் போற்றித் துதியாயோ—நாற்றிசைகை ()
கூப்புந்திருவாசி கும்பிடா யோமுத்தின்
பூப்பந்தற் கோயில் புகழாயோ—காப்பவரு
மம்மான் றிருத்தோ ளறியாயோ வீதியிலே
நம்மானை நம்பிரானை நண்ணாயோ—செம்மாந்த
செங்கதிரோன் மண்டலமுந் தேரோட்ட மும்பரியு
மிங்கிருந்து சேவித்தா யில்லையோ—கங்குற்
றிருவனந்தற் கெங்கிருந்தாய் தீர்த்தவாரிக்கே
யரிவை முழுகியநீ யன்றோ—மருமலரின்
வேள்விக் கொருநாள் விழித்திருந்தா யல்லையோ
கேள்வி விடாயாற்றி கேளாயோ—வாழ்வுடனே ௪௪௫

புஞ்சற் றிருநா ளுறியத்திருநா ளாழ்வார்கள்
செனுசொற் றிருநாள் செலத்திருநாள்—கஞ்சமல
ரோடைத் திருநா ளூலாத்திருநா ணல்வசந்த
கோடைத் திருநாள் குறியாயோ—வேடிக்கை
யெல்லாம் பழகியறிந் தென்னைநீ கேட்பதென்னே
சொல்லா யிதுவுமொரு சூழ்ச்சியோ—நல்லாய்கா
ணென்ன வவளை யிரத்தினபீ டத்திருத்திச
சொன்னவபி டேகஞ் சொரிவித்தாள்—பின்னை
நினைவெடுத்துக் கொண்டா ணெடுமாலே யென்று
ளெனையலைப்ப தெந்தமா லென்று—னனகா சருo
கனக்குமக மீனமே காத்தருளா யென்று
ளெனக்குமக மீனமே யென்றாள்—சினக்கும்
பழுதுகைக்கு மாமையே பாரென்றாள் பார்த்தா
லெழுதுகைக்கு மாமையே யென்று—டொழுது
திருவரா கத்தரசே தெய்வமே யென்று
ளிருவரா கத்தருமே யென்று—ளருளாய்
நவநரசிங் காவென்று ணணிநீ நல்கு
மிவனரசிங் காகொடிதே யென்றுண்—மவுனத்
தனிவா மனனே சரணென்று ளென்பா
லினிவா மனனேயிங் கென்றாள்—குனிவிற் சருரு
பரவுமழு வாளானே பாரென்றாள் பார்த்தா
லிரவுமழு வாளானே னென்றாள்—சுருதி

குறிக்கு மிராமனே கூடென்றா ளென்பா
லெறிக்கு மிராமனே யென்றா—ளறிக்கை
திடங்கொள் பலபத்திரா சேரென்றா ளங்கி
யிடங்கொள் பலபத்திரா வென்றா—டடங்கருணை
செய்துகிடடி னுவிரகந் தீரென்றா ளுன்மதலை
யெய்துகிட்டி னுனே யிதோவென்றாள்—வெய்துயிர்த்தா
ளாங்குதிரை யேயென்றா ளாசைகொண்ட மாதரார்க்
கோங்கு திரையே யொறுப்பென்றாள்—வேங்கடத்தி ௪௪௦
னாதிக் கருமுகிலை யாகத் தணைப்பேனோ
சோதிக் கருமுகிலே சொல்லென்றா—ணீதிக்
குரற்கெவுளி பார்த்தாள் குலாவுநிலா மெத்தை
விரற்கெவுளி யென்றாள் வெகுண்டா—ளுரற்கயிறு
கட்டினான் கைக்குளெனைக் கட்டினா னென்றணைத்தாள்
கட்டினா னுன்னியதைக் காட்டென்றாள்—கிட்டினா
ளோடல் வழிதே யுரைத்தாள் சுழித்தசுழிக்
கூடலுடன் சங்கத்தைக் கூடினாள்—பாடி
நகைத்தாள் குறத்தி நவிலென்றாள் வாடித்
திகைத்தாள் புழுகோடத் தீர்ந்தாள—பகைத்தமத ௪௪௫
னத்திர சாலையென வஞ்சாமற் பூஞ்சோலைப்
பத்து மாறும் பரிசித்தா—ளத்தலத்திற்
கோல மணிக்குருந்தின் கோடெல்லாஞ் சோதித்தா
ளாலி னிலைகளெல்லாம் மாராய்ந்தா—ளாலி

லணைத்த குருகையிறைக் கன்றிழமீயப்
பணைத்தபுளி நறைகவட்டைய பாத்தது—விளைக்கயலா
லோரரசைக் கண்டா னுயாவேங் கடத்தரசே
பாரரசே வானோர் பதியரசே—பேரரசே
யென்னரசே யென்றென் றிறைஞ்சினா னிந்தமா
நின்னரசே யென்றானை நிந்தித்தான்—முன்னமே ௪௭0

திருமலையான் வேஙகடத்தான் சேட கிரியான்
றரும விடபா சலத்தான்—கருடகிரி
நின்றா னடந்தா னெடுந்தே ரதிரோடிச்
சென்றாள் வணங்கிச சினுங்கினாள்—மன்றாடி
வந்தரிவை நின்ற மயலு மனத்துயரு
மந்தரி யாமி யறியானோ—சந்ததமு
மெள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்குங் கலந்திருப்பா
னுள்ளத்தி னுள்ள துணரானோ—வள்ளலெனத்
தஞ்ச வுலகனைத்துந் தானே பரிப்பானோர்
வஞ்சி தனையாள மாட்டானோ—கஞ்ச ௪௭௫

மதுர முறுவல் வழங்கியருள் செய்தா
னுதவி யதிற்பிறந்த தொன்றோ—விதுவொடிளங் [ய்க்
காற்றுக்குத் தன்னணையாய்க் கார்க்கடற்குத் தன்கணையா
கூற்றுக் குயிற்குத்தன் கோலமாய்த்—தூற்றிவருந்
தாயருக்குஞ் சேமணிக்குந் தானேயாய்த் தன்மகற்கு
சேயத் தொருபாக னெற்றியாய்த்—தூய

நறுநுதலா சைப்பிணிக்கு நன்மருந்து மான
தறைமணித்தே ருங்கடநத தப்பாற்—பிறகொருத்தி

## தெரிவை.

மாதுரிய விற்கை மதனிரதி தேவியைநீ
யேது தெரிவை யெனுந்தெரிவை—காதற் சஅ0
குளிகை யதிசுரத கோலா கலபெண்
பளித சுகந்தரச பாகந்—தெளிதே
னமுத லகிரிபர மானந்த வெள்ளங்
குமுத சகாயநிறை கோலரு—சுமுக
மனோகரசஞ் சாரி வசீகரசஞ் சீவி
விநோதவலங் கார விபூதி—நனோபலவின்
சாபகன ரூப சலாபமயிற் சந்த்ரகுடைப
பூபரண னுபரணப பொற்றேவி—சோபனத்தின்
பண்டாரி யண்டம் பதினு லு நின்றளந்து [ரையிற
கொண்டான் குழைந்தனைய கொண்டையாள—வெண்டி
சேமவே தம்பறித்த சேலைப்போ லேமிளிர்ந்து
காமவே தம்பறித்த கண்ணினு—ளேமநிறச
சூதுடனே சூது துவக்கவோ மாமுகுளப
போதுடனே வாது புரியவோ—வாது
மலையுடனே மற்பொரவோ வன்னவனத் தென்னங்
குலையிளநீர்க் கண்களிலே குத்தவோ—தலையெடுத்து

வாரணத்தூத ரேரெற்று வாரணத்துக் கென்னவோ
பூரணரும் பத்தைப் புடைக்கவோ—வீரமணித்
தாளமெல்லா மாளவே சாடுவிக்க வோசக்ர
வாளமெல்லா மீள வரவோ—வேளின் சஅ0

முடிக்கு முடியிடவோ முண்டகனண் டத்தை
யிடிக்கு முபாய மிடவோ—படிக்குளனக்
கிட்டிக் கதித்துக் கிளைத்துத் திளைத்தாரங்
கொட்டிப் புளகித்துக் கூறிட்டுப்—பட்டுக்கச்

சொப்பித்தொப் பற்றுக்கப் புற்றுச்செப் பச்செப்பச்
செப்பொத்துப் பற்பத்தைச் சிட்சித்துக்—கப்பக்கற்
பூரத்தைச் சாரித்துப் பூரித்திட் டாரித்துப்
பாரப்பொற் பாரத்தைப் பாரித்துச்—சீரித்துக்

கண்ணன் விழிக்குணமுங் கம்மிற் புடைப்புமவன்
வண்ண மணியாழி வட்டணிப்பு—நண்ணுபெருஞ் சஅரு

கொங்கையாள் பங்கயத்தின் கொங்கையா ளாகாய
கங்கையா ளுந்திக் கனஞ்சுழியாள்—மங்கையரைச்
சங்குஞ் சிறந்தோங்கச் சக்கரமங் கேபொலிய
பங்கயங்கள் காட்டும் படிதோன்றப்—பொங்கரவத்

தாடவே நன்று யலங்கரித்த நன்னீல
வோடை வடமலைமே லுண்டன்றே—யாடையின
ரோட மைத்தகழு நீராட வென்னுடனே
நீராட வாரீரோ நீரென்றாள்—காரிகையே

யந்நீ ருலாக்கல்லா தார்க்குவச மென்றுரைத்தார்
சொன்னீ ரறிந்தெனவே சொல்லாடி—நன்னுதலீ ருO
ரத்துளவோன் பற்றி யணையாத போதெனது
குத்து முலைகள் குடயாமோ—சுத்தநிறப்
பாமயிலின் மாமன் பயிலாத போதிந்தத்
தாம மணிக்கழுத்துச் சங்காமோ—பூமடந்தை
யாட்சி மகிண னகப்படா தேயிருந்தாற்
காட்சி விழிகள் கடலாமோ—மாட்சிவனம்
புக்க சிலைமேகம் போற்றாத போதெனது
மிக்க புருவநுதல் வில்லாமோ—சிக்கெனவே
வேத முழுங்குதுளி வேணுநா தன்முனிந்தாற்
காத விருதோள் கழையாமோ—சோதியணை ருOரு
யெங்கோன்பி லேயுவப்ப னெங்கோன்பி லேயணைப்ப
னென்றோ வகற்றுவகை யென்றோதா—னென்றோ
டுரையீர் திலத முரைப்பீ ரிருந்து
கரையீர் களபங் கரைப்பீர்—விரகந்
தெளியீர் பனிநீர் தெளிப்பீர் கலந்தே
யளியீர் துயரை யளிப்பீர்—துளவுகொடு
வாரீர் கடும்புழுகை வார்ப்பீர்சந் தாபொன்று
நேரீர் பெருநதூறு நேர்விப்பீ—ராரிருந்து
மேதா மடற்பெறுவ தேதா மதமென்ன
மாதே வனிதையே வஞ்சியே—கோதையே ருகO

மின்னே மணியே வெருவாதே நேசித்தா
னின்னே வருவா ரெனுமெல்லை—பொன்னே

ருரத்தா னரங்கத்தா னூரகத்தான் கண்ண
புரத்தான் குடந்தைப் புரியான்—றிருத்தெற்றி

யம்பலத்தான் புல்லணையா னய்ப்பாடி யான்கச்சி
வெம்பதியான் சீராம விண்ணகரா—னம்புட்

குழியா னயோத்தியான் கோவற் பதியான்
கழிவேலை யான்பாட கத்தான்—மழிசையான்

சித்திரகூ டத்தான் றிருப்பதியா னெவ்வுளான்
மெய்த்திருவை குந்தத்தான் வெஃகாவான்—புத்தூரா(ருசுரு

னத்திபுர விண்ணகரா னையா னங்கூரான்
சந்த வனந்த சயனத்தா—னிந்தளூர்

புள்ளம்பூ தூரான் புலியூரா னலியான்
வெள்ளக் குளத்தினன் வெள்ளறையான்—வள்ளற்

குறுங்குடியான் கண்ணங் குடியா னழுந்தூ
ருறைக்கைநறை யூராத னூரான்—சிறந்ததிரு

முட்டத்தா னையேனை முட்டத்தான் காத்தருளு
மிட்டத்தான் வேங்கடத்தி லெம்பிரான்—சிட்டன்

வரத னலர்மேன் மங்கைமண வாள
னிரதந் தனிலேயெ.திர்ந்தான்—கருதி ருஉ0

நினைத்திருந்த காந்தனெதிர் நின்று லவன்முன்
பினைத்தெளிந்து பேசுவதே பெண்மை—யெனத்தொழுது

மாமாரி யைத்தடுத்த வள்ளலே மன்மதன்றன்
பூமாரி யைத்தடுக்கப் போகாதோ—காமாரி

சந்தச் சிலையொடித்த தாட்டிக ரேயனங்க
னந்தச் சிலையொடித்தா லாகாதோ—சுந்தரரே

நாதக் கடலடைத்த நாதரே யென்கண்ணீ
ரோதக் கடலடைக்க வொண்ணுதோ—சீதையெனும்

பொன்னையசோ கச்சிறையிற் புல்லாமன் மீட்டவரே
யென்னையசோ கம்பொருவ தெண்ணீரோ—மன்னிவரும்

பேருருவப் புள்ளைப் பிளந்தவரே யன்றிலெனுங்
காருருவப் புள்ளைக் கடியீரோ—சீரிமையோர்

காமரத்தைச் சாய்த்தவரே காமனுக்குப் பூப்பூத்த
மாமரத்தைச் சாய்த்துவிட மாட்டீரோ—தாமமுலை

யானை யழைத்தா லணுகிரோ வீதியிலே
தானை சரிந்தவளைத் தாங்கீரோ—மேனியெல்லாம்

பொற்பாவை யானவளைப் புல்லீரோ நீரணைய
நிற்பா ளிருப்பை நினையீரோ—சொற்பாவை

யந்தாதி பாடு மவள்சூடு மாலையைநீர்
தந்தாளீர் முத்தி தருந்தாளீர்—வந்தாளீர் ௫௧

கொற்றவரே யென்றுள் கொடுத்தார் தொடைபெற்ற
சிற்றிடையா ளிற்கத் தெருவகன்றார்—மற்றொருத்தி

## பேரிளம்பெண்.

கண்களெலா மானந்தக் கண்களாய்க் காமனுடன் (லாஞ்
பெண்களெலாந் தெண்டனிடும் பேரிளம்பெண்—பண்களெ

சொற்கலைக ளெல்லாந் துளவோன் மருகிக்குக்
கற்கவுப தேசிக்குங் கல்வியாள்—பொற்கொடியார்

விஞ்சிப் பிழைக்கவொட்டார் மென்கலையாற் கட்டுவரென்
றஞ்சிக் குடிபோ மருமருங்காள்—பஞ்சமுகன்

பொன்றுஞ் சடத்தோரைப் போதித்தே தானுக
வென்றுந் துதிக்கு மிரண்டெழுத்துந்—தன்றுதை ருடரு

பொங்குந் தறியைப் புடைக்குமுன் ஞோர்பிள்ளை
யெங்குந் தனைக்காட்டு மெட்டெழுத்துஞ்—செங்கண்ண

னன்புடையோர் நெற்றிக் கயனெழுதா வவ்வெழுத்துந்
தன்புடையார் கிள்ளைக்குச் சாற்றுவாள்—பொன்புணரு

மொற்றை முதலை யுனதுதரத் தோமென்று
மற்றை யிருவர் வளைந்ததோ—தெற்றுறியிற்

பாலருந்த வேண்டிப் பரமன் பவளவிரல்
கோலி வளைந்த குடங்களோ—மேலுலகி

லீட்டியதா ளைப்பரவி னீதேவை குந்தமெனக்
காட்டியகை பார்க்கவருங் காட்சியோ—நாட்டிற் ருச0

பறிந்தசுரர் கற்பகத்தைப் பற்றியநாட் சாய்த்து
முறிந்ததிசைப் பாலர் முடியோ—செறிந்தகுண

ஞானச் சுடரிரங்கி நாளேவா வென்றநாண்
மானித்து நின்றான் வதனமோ—தானூர்
கொடிசாய்த்த மந்தரமோ கூறுமெனச் சற்றே
முடிசாய்த்து நின்ற முலையாள்—கடிசாயக்
குடகோ புரமுலைக்குங் கூந்தலுக்கு மாயோன்
சடகோப மன்றித் தருமோ—நடகோபன்
மேல்வளையை நோக்கென்றீர் வீரத்தோள் சக்கரத்து
வால்வளைய லன்றி வயங்குமோ—கோல்வளையீர் ருசரு
நாமத் திலத நமக்கன்றி நெற்றியின்மே
லேமத் திலத மிசையுமோ—காமிக்கு
மவ்வஞ்ச னக்கோல மன்றியே வென்றிவிழிக்
கிவ்வஞ்ச னக்கோல மேற்குமோ—செவ்விமலர்ப்
பொற்றகரத் தாற்பிடித்துப் புல்லவா வென்றாலு
முற்ற கடக முறுத்தாதோ—கொற்றவரி
னுட லருங்கதையு நாகமமுங் காதிலே
தோடிருந்தாற் கேட்கத் துலங்குமோ—சேடனெடும்
பொன்சிலம்பு நாமம் புனைந்தபோ தேதாளில்
வன்சிலம்பு பூண வழக்குண்டோ—முன்சிறிது ருரு0
நாணமற் சேய்தே னயப்பிலெனய் பல்பணியும்
பூணு தழுகெறிக்கும் பொற்பினு—ளூணுடெ
தாளார குப்போற் கருகிமுது கிற்புரண்டு
நீள முடித்தமயிர் நின்றூடத்—தோளிற்

கடகமாய் வெண்கலையே காசந் துவளப்
படமா மண்டபத்தின் பாங்கே—யடியார்கைத்
தாமரைப்பூ வன்னமெனச் சாமரைக்கா டோங்கவே
மாமணிச்சிங் காதனத்து வந்தேறித்—தேமறைக்குள்

வாழ்வான நற்பொருளை வாக்கினால் வாரிவடித்
தாழ்வார் திரட்டு மமுதத்தைச்—சூழ்வார்க்குச் ௫௫௫
செப்ப வவரெல்லாந் தேமொழிநீ வல்லையேன்
முப்பொருளி லாரே முதல்வா—ரப்பொருளை
நீளவுரை யென்றார் நினைக்கலா மோபிறரை
யாளனுள்ள கற்புள்ளா ரானாலுங்—கேளரு
மருவு மாரனயனாண் மாமலரா னென்னுந்
திருவமர்மெய்த் தேவ னெவனே—வெருவியே
மூலமென வன்றழைத்த மும்மதயா னைக்கெவனே
யோலமென வேயன் றுதவினான்—பாலொருவன்

கையிலிட்ட சாயக்க பாலந் தனையெவனே
யையமிட்டு நீக்கி யனுப்பினான்—வையகத்து ௫௬௦
வாணனுயி ரைத்தாங்க வந்தான் றனையெவனே
தூணிவிசி கத்தாற் றுரத்தினான்—சேணுலகிற்
சென்றபா தங்கழுவுந் தீர்த்தந் தனையெவனே
யென்றுமொரு வன்முடியி லேற்றினா—னன்றொருவன்
பொற்பாதந் தன்னிற் புனைந்த மலரெவனே
கற்பா யொருவன்முடி காண்பித்தா—னற்புதமாங்

கல்லையொன்ற திண்புயத்துக் கண்டாக னற்கெவனே
யில்லையென்முன் முன்முத்தி யீந்திட்டான்—றெல்லைச்
சுருதிமுனி கையெடுத்துச் சொன்னு னெவனே
யிருடியுதை யேற்று னெவனே—கருதித் ௫௬௫
தெரிந்தெழுவர் சத்தியங்கள் செய்தா னெவனே
யிருந்தமய மெல்லா மெவனே—தரும்போ
துலகமெலாஞ் சால வுறைவா னெவனே
யிலையிலொரு மித்தா னெவனே—நிலைநின்
றெவனேதன் னுந்தியிலே யேழுலகு முய்த்தா
னெவனே வணக்கமெலா மேற்பா—னவனேயென்
பங்கிற் பரம்பொருளாய்ப் பார்ப்பேன் பிறப்பறியே
னிங்கெழு ஞாயி றெனகென்று—ளங்கவருங்
கள்ளியிவ ளன்றே கரப்பானைக் கள்ளனைநீர்ப்
பள்ளிதனைப் புள்ளிற் பறப்பானைக—துள்ளனைவீண் ௫௭0
கட்டுணியை வண்டாயக் கழுவே றியைநூறு
திட்டுணியைப் பேயுயிரைத் தின்றானைக்—கட்டக்
கருநீலனைவிரும்பிக் காதலித்து விட்டாள்
பெருநூல் படித்தாள் பிழைத்தா—ளிருநிதியே
யென்னு மளவி லெழில்வேங் கடமலையா
னன்னமெழு பொன்முகரி யாற்றிறைவன்—செங்கெல்விளை
நல்லதிரு வேங்கடவூர் நாட்டிறைவன் சோணாட்டுத்
தில்லைப் பதிவாழ் திருப்பதியான்—குல்லைத்

திருத்துழாய் மாலையான் சேகந்தி முன்னே
பரித்தருளத் தோன்றும் பரியான்—விரித்தொருகா ருஎரு

ளாதிமுத லேயென் றழைத்தமத வாரணத்தான்
கோதிலழ கார்புட் கொடியினான்—வேத

முரசினான் செம்பொன் முடியணிந்த சேனை
யரசினா னன்னைதனை யாள்வான்—சிரசினான்

கண்ணினா னெஞ்சினான் கந்தனுக்கு வேங்கடத்தி
னண்ணினான் பொற்றேரி னண்ணினா—னெண்ணினான்

வந்தா னெனப்போய் வணங்கியெதிர் கொண்டாள்
கொந்தா யிருகரமுங் கூப்பினாள்—சிந்தா

மணியே மழையே மலையேயென் வாழ்வே
யணியே யரசே யருளே—தணியாத ருஅ0

வேதமே வேத விழுப்பொருளே வேதத்தின்
பாதமே பாதப் பரஞ்சுடரே—நாதமே

யண்டமே யண்டத் தடித்திடரே யண்டத்தின்
பிண்டமே பிண்டம் பிறந்தகமே—பண்டைப்

பரமே பராபரமே பௌவமே யெட்டக்
கரமே விதியே கதியே—வரமே

பகுதியே மானே பழையவகங் கார
மிகுதியே தத்துவத்தின் வித்தே—புகுதியே

கோலமே கற்றோர் குணலமே கல்லாதா
ராலமே வானோ ரமுதமே—நீலமே ருஅரு

# திருவேங்கடவுலா.

[illegible]சனருச் [illegible]னையே யிந்திரனா ராதனையே
[illegible]ச மலரோன் வழிபாடே—பாசன்
[illegible]வமே [illegible]றலி தியானமே வாயுத்
[illegible]யமே குபேரன் சரணே—நவமான
பூங்க[illegible]லை யான்செய்த புண்ணியமே சேர்ந்தாரைத்
தீங்கடர வொட்டாத தெய்வமே—வேங்கடத்து
மாலை யுமக்குநான் மாலான பின்போகக்
சலேறு மோகங் கடக்குமோ—பேலேறு
[illegible]ன்னைப்பொன் னாக்கியநீர் வேண்டா வெறுப்பாமோ
[illegible]வன்னைப்பொன் னாக்கா திருப்பீரோ—பின்னைத்தான்
சீசீ யெனவுடைய தெய்வத்தைக் கேட்டேனே
பேசீரெ னப்பேசும பெம்மானே—மாசீதை
யுற்றகன லோமகனா ரோமப்பெ ருங்கனலோ
கொற்றவரே காமவனற் கொல்லாதோ—நித்தமிளந்
திங்கள் குளிர்ந்திருந்தாற் செஞ்சடையோன் சேவடியி[illegible]
கங்கைச் சுமைசுமக்கக் கல்லானே—யங்கிவனை
தென்றல் குளிர்ந்திருந்தாற் சிந்தைவருந் திக்கடலைக்
குன்றிற் குறியோன் குடியானே—யென்றுநீர்
வேர்க்கவலை யாதிருந்தால் வேங்கடத்தி லேநின்று
பாற்கடலை யெட்டியெட்டிப் பாரீரோ—சீர்க்குழலின் (ரு[illegible]
சீதவெதுப் புப்பொறுத்தாற் சீசகத்தை வாயினா
[illegible]